சென்னைத் தமிழ்க்கழக வெளியீடு






அரும்பெறற் செல்வமாகத் தமிழ்மக்களுக்கு இதுகாறும் கிடைத்துள்ள தமிழ் நூல்களிற் காலத்தானும் செய்தியானும் தலைசிறந்து விளங்குவது தொல்காப்பியம் ஒன்றேயாகும். எம் மொழியின் இயலும் அம்மொழியின் திறத்தினையே விளக்கி நிற்பதாக, நந்தம் தமிழியல் ஒன்றும் அம்மொழியின் திறத்தினை விளக்கி நிற்பதோடு அம்மொழியாளர் வழக்க ஒழுக்கச் செய்திகளையும் செவ்விதின் விளக்கும் சிறப்பு வாய்ந்ததென்பது அறிஞர் அனைவரும் அறிந்ததொன்றாம்.

இத்தகைய நூற்கு முதற்கண் உரை கண்டார் இளம்பூரண அடிகள். பின்னர்ப் பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர் முதலிய உரையாசிரியரும் அதற்கு உரை வகுத்தனர். இவற்றுள் சேனாவரையமும் நச்சினார்க்கினியமும் வெளி வந்து உலவாநின்றன. இவற்றைப் பெரிதும் முயன்று அரிதின் வெளியிட்ட அறிவாளராகிய ராவ் பகதூர் தாமோதரம் பிள்ளையவர்கட்கும், ஆறுமுக நாவலர் அவர்கட்கும் தமிழுலகம் என்றும் மறவா நன்றி பாராட்டும் கடப்பாடுடையதாகும்.

இளம்பூரணத்து எழுத்ததிகாரம் ஒன்றே சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் அவர்கள் வெளியிட்டனர்; சொல்லும் பொருளும் இதுகாறும் வெளிவந்தில. என் ஆசிரியர் திருமயிலைச் சண்முகம்பிள்ளையவர்கள் கட்டளையைத் தலைமேற்கொண்டு அவற்றை வெளியிட முயன்றேன். இம்முயற்சி முற்றுமாறு எடு தேடியகாலத்து, என் நண்பர் அநவரதவிநாயகம் பிள்ளையவர்கள்

பதிப்புரை

தம்மிடம் இருந்த ஏடு ஒன்றனையும், அதைப் பெயர்த்து எழுதிய தமது கையெழுத்துப் பிரதியினையும் அன்புடன் தந்தனர்; இவ்வேடு கனகசுந்தரம்பிள்ளை யவர்கட்கு உரியதாம். இவற்றைக் கொண்டு, என் ஆசிரியர் அளித்த ஏட்டுடன் ஒப்பு நோக்கிச் செப்பஞ் செய்துவருகையில், அஃது இனிது முடியுமாறு, என் நண்பரும் ஒருசாலை மாணவரும் ஆகிய சே. சிவஞானம் பிள்ளை யவர்கள் தாம் அரிதிற்றேடிய நல்ல ஏடு ஒன்றை அனுப்பினர். இது திருநெல்வேலிச் சோர்ணம் பிள்ளை யவர்கள் தந்த ஏடு எனத் தெரிகின்றது.

மேற்கண்ட ஏடுகளை ஒப்புநோக்கி முதற்கண் பொருளதிகாரத்தை அச்சிடுவான் தொடங்கினேன். ஏடு எழுதுவோர் மயக்கத்தானும், என் சிற்றறிவிற்கு விளங்காமையானும் இதன்கண் பிழைகள் பல நேர்ந்திருத்தல் கூடும். பலரிடத்திற் பலபடச் சிதைந்து கிடக்கும் இவற்றை ஒருவாறு அச்சியற்றி வெளியிடுவது ஒன்றே என் நோக்கமாதலின், என் நண்பர் கனகசுந்தரம் பிள்ளை யவர்கள் துணையைக் கொண்டு ஒருவாறு அகத்திணையியல், புறத்திணையியல் இரண்டையும் முதற் பகுதி யாக்கி முடித்து வெளியிட்டேன். இந் நன்முயற்சியில் எனக்கு அன்புடன் துணை புரிந்த அறிஞர் அனைவர்க்கும் என் உள்ளம் உவப்ப வாழ்த்துக் கூறுகின்றேன்.

இப் பதிப்பினைச் சென்னைத் தமிழ்க் கழகத்தினர் மேற்கொண்டு, இதனை அக்கழகத்தின் வெளியீடாகக் கொண்ட பெருந் தகைமையின்பொருட்டு அக்கழகத்தினர்க்கும், யான் விரும்பியவாறே இதனை நலனுறப் பதித்துத் தந்த சென்னைக் குமாரசாமிநாயுடு குமாரர்களுக்கும் என்றும் மறவா நன்றி பாராட்டுகின்றேன்.

இம் முயற்சிக்கண் என்னைப் புகுத்தித், தோன்றாத் துணை யாக நின்று அருள் புரியும் தணிகைப் பெருமானை என் மன மொழிமெய்களான் வாழ்த்தி வணங்குகின்றேன்.

'காவேரியகம்'
சென்னை, கி.

கா. நமச்சிவாயன்.

# சூத்திர முதற் குறிப்பு

## அகத்திணையியல், புறத்திணையியல்

## சூத்திர முதற் குறிப்பு

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

முதலாவது

### அகத்திணையியல்

க. கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப.

என்பது சூத்திரம்.

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோவெனின் பொருளதிகாரம் என்னும் பெயர்த்து: பொருள் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். நிறுத்த முறையானே எழுத்தும் சொல்லும் உணர்த்தி, இனிப் பொருள் உணர்த்தவேண்டுதலின், இது பிற்கூறப்பட்டது.

பொருள் என்பது யாதோவெனின், மேற்சொல்லப் பட்ட சொல்லினான் உணரப்பட்டது. அது, முதல் கரு உரிப்பொருள் என மூவகைப்படும்;

'முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை' (அகத் - ௩.)

என்றாராகலின்.

முதற்பொருளாவது நிலமுங் காலமும் என இரு வகைப்படும் :

'முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப வியல்புணர்ந் தோரே' (அகத் - ௪.)

என்றாராகலின்.

'நிலம்' எனவே நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும், காற்றிற்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்.

காலமாவது மாத்திரை முதலாக, நாழிகை யாமம் பொழுது நாள் பக்கம் திங்கள் இருது அயநம் ஆண்டு, யுகம் எனப் பலவகைப்படும்.

கருப்பொரு ளாவது இடத்தினும் காலத்தினும் தோற்றும் பொருள். அது தேவர் மக்கள் விலங்கு முதலாயினவும், உணவு செயல் முதலாயினவும், பறை யாழ் முதலாயினவும், இன்னவாய பிறவும் ஆகிய பல வகைப்படும் :

'தெய்வ முணவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇய
அவ்வகை பிறவுங் கருவென மொழிப' (அகத் - ௧௮.)

என்றாராகலின்.

உரிப் பொருளாவது மக்கட்கு உரிய பொருள். அஃது அகம் புறம் என இருவகைப்படும். அகமாவது, புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனவும், கைக்கிளை பெருந்திணை எனவும் எழுவகைப்படும் :

'புணர்தல் பிரித லிருத்த லிரங்கல்
ஊட லிவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே' (அகத் - கசு.)

எனவும்,

'காமஞ் சாலா விளமை யோள்வயின்
ஏமஞ் சாலா விடும்பை யெய்தி
நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே' (அகத் - ருO.)

எனவும்,

'ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே' (அகத் - ருக.)

எனவும் ஓதினாராகலின்.

அஃதேல், கைக்கிளை பெருந்திணை என்பவற்றை உரிப்பொருளென ஓதியது யாதினாலெனின், எடுத்துக் கொண்டகண்ணே, 'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்' என ஓதி, அவற்றுள் நடுவண் ஐந்திணைக்குரியன இவை எனப் 'புணர்தல்' முதலாக வகுக்கப்படுதலின், முன் வகுக்கப்படாத கைக்கிளையும் பெருந்திணையும் உரிப் பொருளாம் என்றுணர்க.

புறமாவது நிரைகோடற் பகுதியும், பகைவயிற் சேற லும், எயில் வளைத்தலும், இருபெரு வேந்தரும் ஒரு களத் துப் பொருதலும், வென்றி வகையும், நிலையாமை வகை யும், புகழ்ச்சி வகையும் என எழுவகைப்படும். அஃதேல், புறப்பொருளை உரிப்பொருளென ஓதிற்றிலராலெனின்,

'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' (புறத் - ருசு.)

எனவும், பிறவும் இவ்வாறு மாட்டேறுபெற ஓதலின் அவையும் உரிப்பொருளாம் என்க.

அகம் புறம் என்பன காரணப்பெயர். அகப்பொருளாவது போகநுகர்ச்சியாகலின் அதனுறுபயன் தானே அறிதலின் அகம் என்றார். புறப்பொருளாவது மறஞ்செய்தலும், அறஞ்செய்தலும் ஆகலான், அவற்றுறு பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்றார்.

அஃதற்றாக, அறம் பொருள் இன்பம் வீடு என உலகத்தோருஞ் சமயத்தோருங் கூறுகின்ற பொருள் யாதனுள் அடங்கும் எனின், அவையும் உரிப்பொருளினுள் அடங்கும். என்னை? வாகைத்திணையுள்,

'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபி னரசர் பக்கமும்
இருமூன்று மரபி னேனோர் பக்கமும்' (புறத் - கஎ.)

என இல்லறத்திற்கு உரியனவும்,

'காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே' (கற்பு - ருக.)

என நான்கு வருணத்தார் இயல்பும்,

'நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்' (புறத் - கஎ.)

எனவும்,

'காம நீத்த பாலின் கண்ணும்' (புறத் - உக.)

எனவும், புறமாகிய வீடுபேற்றிற்கு உரிய வானப்பிரத்த சந்நியாசிகளியல்புங் கூறுதலின் அறமும் வீடுபேறும் அடங்கின.

வெட்சி முதலாகத் தும்பை யீறாகக் கூறப்பட்ட பொருண்மையும், வாகையிற் கூறப்பட்ட ஒருசாரனவும், காஞ்சிப்படலத்து நிலையாமையும், பாடாண் பகுதியிற் கூறப்பட்ட பொருண்மையும் ஆகிய இவை யெல்லாம்

பொருளின் பகுதியாதலின் பொருள் கூறினாராம்; அகத்திணை யியலானும், களவியல் கற்பியலானும் இன்பப் பகுதி கூறினாராம் என்க.

அஃதேல், பிற நூலாசிரியர் விரித்துக் கூறினாற் போல அறமும் பொருளும் விரித்துக் கூறாததென்னையோ வெனின், உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது அறிவிலாதாரை அறிவுகொளுத்த வேண்டியன்றே: யாதானும் ஓர் நூல் விரித்தோதிய பொருளைத் தானும் விரித்தோதுவனாயின் ஓதுகின்றதனாற் பயன் இன்றாமாதலால், முதனூலாசிரியர் விரித்துக் கூறின பொருளைத் தொகுத்துக் கூறலும் தொகுத்துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் செய்யும் மரபாம் என் றுணர்க. அஃதேல், இந்நூலகத்து விரித்துக்கூறிய பொருள் யாவையெனின், காமப் பகுதியும் வீரப் பகுதியுமாம் என்க. இன்பங் காரணமாகப் பொருள்தேடு மாகலானும், பொருளானே அறஞ்செய்யு மாகலானும், இன்பமும் பொருளும் ஏற்றமென ஓதினாரென வுணர்க.

அஃதற்றாக, இது பொருளதிகாரமாயின் உலகத்துப் பொருளெல்லாம் உணர்த்தல் வேண்டுமெனின், அவை, முதல் கரு உரிப்பொருள் எனத் தொகை நிலைவகையான் அடங்கும்: அவ்வாறு வகுக்கப்பட்ட பொருளை உறுப்பினானும் தொழிலினானும் பண்பினானும் பாகுபடுத்தி நோக்க வரம்பிலவாய் விரியும். இக் கருத்தினானே இவ் வாசிரியர் உலகத்துப் பொருளெல்லாவற்றையும் முதல் கரு உரிப்பொருள் என ஓதினாரென வுணர்க.

அஃதற்றாக, இவ் வதிகாரத்துள் உரைக்கின்ற பொருளை யாங்ஙனம் உணர்த்தினாரோவெனின், முற்பட இன்பப் பகுதியாகிய கைக்கிளை முதலாகப் பெருந்திணையீறாக அகப்பொரு ளிலக்கணம் உணர்த்தி, அதன்பின் புறப்பொருட் பகுதியாகிய வெட்சி முதலாகப் பாடாண்

டிணை யீருகப் புறப்பொரு ளிலக்கணம் உணர்த்தி, அதன் பின் அகப்பொருட் பகுதியாகிய களவியல் கற்பியல் என இரண்டுவகைக் கைகோள் உணர்த்தி, அதன்பின் அகம் புறம் என இரண்டனையும் பற்றி வரும் பொருளியல்பு உணர்த்தி, அதன்பின் அவ் விருபொருட்கண்ணும் குறிப்புப்பற்றி நிகழும் மெய்ப்பாடு உணர்த்தி, அதன்பின் வடிவுந் தொழிலும் பண்பும் பயனும்பற்றி உவமிக்கப்படும் உவமவியல் உணர்த்தி, அதன்பின் எல்லாப் பொருட்கும் இடமாகிய செய்யுளியல் உணர்த்தி, அதன்பின் வழக்கிலக்கணமாகிய மரபியல் உணர்த்திஞர் என்று உணர்க. இவ் வகையினனே அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என ஒத்து ஒன்பதாயின.

இவ் வதிகாரத்துள் * இம்முதலோத்து அகப்பொருளிலக்கணம் நுதலிற்ருக, இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்ருேவெனின், அகப்பொருள் இத்துணையென வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் முற்படக் கிளந்த எழுதிணை என்ப — கைக்கிளை என்று சொல்லப்படும் பொருள் முதலாகப் பெருந்திணை என்று சொல்லப்படும் பொருள் ஈருக ஏழு பொருள் முற்படக் கூறப்பட்டன என்று சொல்வர் என்றவாறு.

'முதலா' என்பது முதலாக என்னும் பொருள்பட நின்றது; 'விகாரம் எனினும் அமையும். இறுவாயாக என்பதன்கண் ஆக என்பது எஞ்சி நின்றது. எழுதிணையும் முற்படக் கிளந்த எனற்பாலது மொழிமாறி நின்றது. 'கிளந்த' என்பது கிளக்கப்பட்டன என்னும் பொருள்பட வந்த முற்றுச்சொல். முற்படக்கிளந்த எழுதிணை கைக்கிளை முதலாகப் பெருந்திணை யிறுதியாகிய வெனினும்

* 'இவ் வதிகாரத்து முதற்கணேத்து' எனவும் பிரதிபேதம்.

இழுக்காகாது. 'முற்படக்கிளந்த' என்றமையான், அவை எழும் அகப்பொருளென்று கூறினருமாம்; அகம், புறம் எனப் பொருளை வரையறுத்தல் இவர் கருத்தாகலின். அன்னதாதல்,

'அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்' (புறத் - க.)

என்பதனாற் கொள்க.

'முற்படக் கிளந்த வெழுதிணை' எனவே பிற்படக் கிளக்கப்படுவன எழுதிணை உள என்பது பெறுதும். அவையாவன, வெட்சி முதலாகப் பாடாண்டிணை யீறுகக் கிடந்த எழுதிணையுமாம். இவ்வகையினன் இவ்வதிகாரத்திற் கூறப்பட்ட பொருள் பதினன்கு என்பதூஉம், அவையும்,

'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' (புறத் - க.)

எனவும்,

'வஞ்சி தானே முல்லையது புறனே' (புறத் - கூ.)

எனவும், இவ்வாறு கூறுதலின், ஏழாகி யடங்கும் என்பதூஉம் கொள்க.

அஃதேல், மெய்ப்பாட்டியலானும், உவமவியலானும், செய்யுளியலானும், மரபியலானும், கூறப்பட்ட பொருள் யாதனுள் அடங்குமெனின், அவை கருப்பொருளும் அப் பொருளாற் செய்யப்பட்டனவும், அப் பொருளின் குண முதலியனவும், அப் பொருளின் குறிப்பு நிகழ்ச்சியுமாக லின், அவையும் கருப்பொருளின்பால் நடுவணைந்திணையுள் அடங்கும் என்க. சிறுபான்மை, கைக்கிளை பெருந்திணை யினும் வரும். அவ் வெழுதிணையுமாவன: கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்பன.

கைக்கிளை என்ற பொருண்மை யாதோவெனின், கை என்பது சிறுமைபற்றிவரும்; அது தத்தங் குறிப்பிற் பொருள்செய்வதோர் இடைச்சொல். கிளை என்பது உறவு; பெருமையில்லாத தலைமக்கள் கிளைமை என்றவாறு; கைக்குடை கையேடு கைவாள் கையொலியல் கைவாய்க்கால் எனப் பெருமையில்லாதவற்றை வழங்குபவாகலின். நடுவணைந்திணைக்கண் நிலமும், காலமும், கருப்பொருளும் அடுத்துப், புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனச் சொல்லப்பட்ட அவ் வுரிப்பொருள், ஒத்த அன்பும், ஒத்தகுலனும், ஒத்தவடிவும், ஒத்தகுணனும், ஒத்தசெல்வமும் ஒத்த இளமையும் உளவழி நிகழுமாதலின் அது பெருங்கிளைமை யாயிற்று. முல்லை முதலாகிய ஐந்தும் முன்னர்க் கூறப்படும்.

பெருந்திணையாவது நடுவணைந்திணையாகிய ஒத்த காமத்தின் மிக்கும் குறைந்தும் வருதலானும், எண்வகை மணத்தினும் பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்பன பெருந்திணையின்பாற் படுதலானும், இந் நான்கு மணமும் மேன்மக்கள்மாட்டு நிகழ்தலானும், இவை உலகினுட் பெருவழக்கெனப் பயின்று வருதலானும், பெருந்திணை எனக் கூறப்பட்டது.

அஃதேல், நடுவணைந்திணையாகிய ஒத்த கூட்டம் பெருவழக்கிற் றன்றோவெனின், அஃது, அன்பும் குலனும் முதலாயின ஒத்துவரல் உலகினுள் அரிதாகலின், அருகியல்லது வாராதென்க. இந்நாலகத்து ஒருவனும் ஒருத்தியும் நுகரும் காமத்திற்குக் குலனும், குணனும், செல்வமும், ஒழுக்கமும், இளமையும், அன்பும், ஒழுங்கும் உளவழி இன்பம் உளதாமெனவும், கைக்கிளை ஒருதலை வேட்கையெனவும், பெருந்திணை ஒவ்வாக் கூட்டமாய் இன்பம் பயத்தல் அரிதெனவும் கூறுதலான், இந் நாலுடையார் காமத்துப் பயனின்மை உய்த்துணரவைத்தவாறு அறிந்து கொள்க. (க)

உ. அவற்றுள்,
நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.

இது, மேற்சொல்லப்பட்ட எழுதிணையுள் நிலம் பெறுவன வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேற் சொல்லப்பட்ட எழுதிணையுள் கைக்கிளை பெருந்திணைக்கு நடுவணதாகிநின்ற ஐந்திணைக்கண் நடு எனப்பட்ட பாலை ஒழிய, ஒலிக்கின்ற திரை சூழ்ந்த உலகம் பகுக்கப்பட்ட இயல்பு என்றவாறு.

இதனாற் சொல்லியது எழுவகைத் திணையினும் நிலம் பெறுவன நான்கு என்றவாறாயிற்று.

நடுவணது பாலை யென்று எற்றாற் பெறுதும் எனின் வருகின்ற சூத்திரங்களுள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என நிலம் பகுத்தோதினமையின், நடுவணது பாலை எனக் கொள்ளப்படும். நடுவு நிலைத்திணை எனினும் பாலை எனினும் ஒக்கும். பாலை என்னுங் குறியீடு எற்றாற் பெறுதும் எனின்,

'வாகை தானே பாலையது புறனே' (புறத் - கூ)

என்பதனாற் பெறுதும்.

இச் சூத்திரத்துள் 'ஒழிய' என்னும் வினையெச்சம் எவ்வாறு முடிந்ததெனின், அது 'பாத்திய' என்னும் பெயரெச்சத்தொடு கூடி முடிந்தது. அப் பெயரெச்சம் 'பண்பு' என்னும் பெயர்கொண்டு ஐந்திணை என்னும் எழுவாய்க்குப் பயனிலையாகி நின்றதென உரைப்ப. இவ்வாறு உரைப்பவே 'ஐந்திணை பண்பு' என வருங்காலத்துப் பயன்பட நில்லாமையின், அஃது உரையன்று என்பார், 'ஒழிய' என்பதனை எச்சப்படுத்தாது முற்றுப்படக் கூறி, 'படு திரை வையம் பாத்திய பண்பு நடுவண தொழிய' எனப் பொருளுரைப்ப. அஃதேல் வினையெச்ச வாய்பாட்டால் வரும் முற்று உளவோ வெனின்,

'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (எச்ச - சுக)

என்று முற்றுவாய்பாட்டால் வினையெச்சம் வருதலின், வினையெச்ச வாய்பாட்டால் முற்று வரும் என்பதூஉம் அச் சூத்திரத்துள் அமைத்துக் கொள்ளப்படும் என்ப. இவ்வுரை யிரண்டினும் ஏற்பது அறிந்துகொள்க.

'நடுவணைந்திணை' என்பன யாவை யெனின், முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என்பனவாம். எற்றுக்கு? இந் நூலகத்து அகமும் புறமும் ஆகிய உரிப் பொருள் கூறுகின்றாராகலின், புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என அமையுமே யெனின், புறப் பொருட்கண் நிரைகோடலை 'வெட்சி' எனக் குறியிட்டு ஆளுமாகலின், ஈண்டு இப் பொருளையும் 'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்' என ஆளும் என்க. இதனாற் பயன் என்னையெனின், உரிப்பொருளே திணையென உணர்த்துவாராயின் முதற்பொருளும், கருப்பொருளும் திணையாதல் தோன்றாதாம்; அவையெல்லாம் அடங்குதற் பொருட்டு முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என்றார் என்பது. அவையாமாறு வருகின்ற சூத்திரங்களான் விளங்கும். (௨)

௩. முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை.

இதுமேற் சொல்லப்பட்ட 'நடுவணைந்திணை' ஆமாறும், ஒருவகையான் உலகத்துப் பொருளெல்லாம் மூவகையாகி அடங்கும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — சான்றோர் செய்யுளகத்துப் பயின்ற பொருளை ஆராயுமிடத்து முதற்பொருள் எனவும் கருப்பொருள் எனவும் உரிப்பொருள் எனவும் சொல்லப் பட்ட மூன்று பொருண்மையுமே, அவை சொல்லுங் காலத்து முறையாற் சிறந்தன என்றவாறு.

இச் சூத்திரத்துள் பாடலுட் பயின்ற பொருள் மூன்றென ஓதி, அவற்றுள் 'உரிப்பொருள்' என ஒன்றைப் பின்னெடுத்து ஓதினமையின், புறப்பொருளும் உரிப் பொருளாகி யடங்கும் என்றவாறு கண்டுகொள்க. முறைமையாற் சிறத்தலாவது: யாதானுமோர் செய்யுட்கண் முதற்பொருளும், கருப்பொருளும், உரிப்பொருளும் வரின், முதற் பொருளால் திணையாகும் என்பதூஉம், முதற் பொருளொழிய ஏனையிரண்டும்வரின் கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம், * உரிப்பொருள் தானே வரின் அதனுல் திணையாகும் என்பதூஉம் ஆம். அவை யாமாறு முன்னர்க் காணப்படும். அஃதேல் ஒரு பொருட்கு ஒரே காரணங் கூறுது மூன்று காரணங் கூறியது என்னை யெனின், உயர்ந்தோர் என்றவழிக் குலத்தான் உயர்ந்தோரையும் காட்டும்; கல்வியான் உயர்ந்தோரையும் காட்டும்; செல்வத்தான் உயர்ந்தோரையும் காட்டும்; அதுபோலக் கொள்க. (௩)

ச. முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி
னியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே.

இது, மேற்சொல்லப்பட்ட மூன்றுவகைப் பொருளினும் முதற்பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் போருள் — முதல் என்று சொல்லப்படுவது நிலமும் காலமும் ஆகிய அவ்விரண்டினது இயற்கை யென்று சொல்லுப உலகியல்பு உணர்ந்தோர் என்றவாறு.

இயற்கை என்பதனுல் †செய்து கோடல் பெருமை அறிந்து கொள்க. நிலம் என்பதனுல் பொருள் தோற்று தற்கு இடமாகிய ஐம்பெரும் பூதமுங் கொள்க. (ச)

---

* 'உரிப்பொருள்தானே தனிப்பொருளாற் றிணையாகும்' எனவும் பிரதிபேதம்.
† 'செய்துகோட் பெருமை' எனவும் பிரதிபேதம்.

ரு. மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.

இது, நிறுத்த முறையானே நிலத்தால் திணையா மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மாயவன் மேவிய காடு பொருந்திய உலகமும், முருகவேள் மேவிய மைவரை உலகமும், இந்திரன் மேவிய தீம்புனல் உலகமும், வருணன் மேவிய பெருமணல் உலகமும், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்சொல்லியமுறையானே சொல்லவும்படும்என்றவாறு.

நிரனிறை. உம்மை எதிர்மறையாகலின் இம்முறையன்றிச் சொல்லவும்படும் என்று கொள்க. அஃதாவது, அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்னுமாக வைத்துக் கூறுதல். அது, சான்றோர் செய்யுட் கோவையினும் பிறநூலகத்தும் கண்டுகொள்க. காடு, நாடு, மலை, கடல் என்பதே பெருவழக்காம். இச் சூத்திரத்துள், 'காடுறை நிலம்' என்னாது 'காடுறை யுலகம்' என்றதனன் ஐவகைப் பூதத்தானும் அமைந்த இடம் என்பது உய்த்துணர வைத்தவாறு கண்டுகொள்க. முல்லை குறிஞ்சி என்பன இடுகுறியோ காரணக்குறியோ எனின், ஏகதேச காரணம்பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்றே கொள்ளப்படும். என்னை காரணமெனின்,

'நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
யரும்பவிழலரி தூஉய்' (முல்லைப். அ - க0)

என்றமையால் காடுறை உலகிற்கு முல்லைப்பூச் சிறந்ததாகலானும்,

'கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே'(குறுந் - ௩.)

என்றவழி மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூச் சிறந்ததாக லானும்,

'ஆர லருந்திய சிறுசிரன் மருதின்
றாழ்சினை யுறங்குந் தண்டுறை யூரன்' (அகநா - உ௫)

என்றவழித் தீம்புனல் உலகிற்கு மருது சிறந்ததாக லானும்,

'பாசடை நிவந்த கணைக்கா னெய்த
லினமீ னிருங்கழி யோத மல்குதொறுங்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்' (குறுந் - க)

என்றவழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்ததாக லானும், இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும் என்க.

பாலை யென்பதற்கு நிலம் இன்றேனும் வேனிற் காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பதாம் பாலை என்பதோர் மரமுண் டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலையென்று குறியிட் டார். கைக்கிளை, பெருந்திணை என்பனவற்றிற்கு நிலமுங் காலமும் பகுத்தோதாமையின் இவ்வாறன்றிப் பிறிதோர் காரணம்பற்றிக் குறியிட்டார் என்க. (௫)

சா. காரு மாலையு முல்லை.

இனிக் காலத்தால் திணையாமாறு உணர்த்துவான் எடுத்துக் கொண்டார்: இஃது அவற்றுள் முல்லைத் திணைக்குக் காலம் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — கார்காலமும் மாலைப்பொழுதும் முல்லைத்திணைக்குக் காலமாம் என்றவாறு.

காராவது மழைபெய்யுங் காலம்; அஃது ஆவணித் திங்களும், புரட்டாசித் திங்களுமாம். மாலையாவது இராப் பொழுதின் முற்கூறு. (சா)

ஏ. குறிஞ்சி,
கூதிர் யாம மென்மனார் புலவர்.

இது, குறிஞ்சிக்குக் காலமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — குறிஞ்சித்திணைக்குக் காலமாவது கூதிர்காலமும் யாமப்பொழுதும் என்பர் புலவர் என்றவாறு.

கூதிராவது ஐப்பசித் திங்களும், கார்த்திகைத் திங்களுமாம். யாமமாவது இராப்பொழுதின் நடுக்கூறு. (ஏ)

அ. பனியெதிர் பருவமு முரித்தென மொழிப.

இஃது, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இதன் பொருள் — குறிஞ்சித்திணைக்கு முன்பனிக் காலமும் உரித்தென்று சொல்லுவர் என்றவாறு.

இதனைக் கூதிர்காலத்தொடு ஒருங்கு கூறாமையின் அத்துணைச் சிறப்பிற்றன்று எனக் கொள்க. குறிஞ்சி என்றது அதிகாரத்தான் வந்தது. முன்பனிக் காலமாவது மார்க்கழித் திங்களும், தைத் திங்களுமாம். 'பருவமும்' என்ற உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை. (அ)

கூ. வைகறை விடியல் மருதம்.

இது, மருதத்திணைக்குக் காலம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — வைகறையும் விடியலும் மருதத்திற்குக் காலமாம் என்றவாறு.

வைகறை யாவது இராப் பொழுதின் பிற்கூறு. விடியலாவது பகற் பொழுதின் முற்கூறு. பருவம் வரைந்தோதாமையின் அறுவகைப் பருவமும் கொள்ளப் படும். இது நெய்தற்கும் ஒக்கும். (கூ)

கO. எற்பாடு,
நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்.

இது, நெய்தற் றிணைக்குக் காலம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — எற்படு பொழுது நெய்தற் றிணைக்குப் பொருண்மை பெறத் தோன்றும் என்றவாறு.

எற்பா டாவது பகற்பொழுதின் பிற்கூறு. (கO)

கக. நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே.

இது, பாலைக்குக் காலமும் இடனும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — நடுவுநிலைத் திணையாகிய பாலையாவது நண்பகற்பொழுது வேனிற் காலத்தொடு புணர்ந்து நின்றவழிக் கருதிய நெறியையுடைத்து என்றவாறு.

என்றது இளவேனில் முதுவேனில் என்னும் இரு வகைப் பருவத்தின்கண்ணும் வரும் நண்பகற்பொழுது காலமாம் என்பதூஉம், ஆண்டு இயங்கும் நெறி நிலமாம் என்பதூஉம் உணர்த்தியவாறு. இளவேனிலாவது சித்திரைத் திங்களும் வைகாசித் திங்களும். முதுவேனிலாவது ஆனித் திங்களும் ஆடித் திங்களும். நண்பகலாவது பகற் பொழுதின் நடுக்கூறு. (கக)

கஉ. பின்பனி தானு முரித்தென மொழிப.

இஃது எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இதன் பொருள் — பின்பனிக்காலமும் உரித்தென்று கூறுப பாலைக்கு என்றவாறு.

இது வேறோதினமையின் வேனில் போலச் சிறப் பிற்றன்று எனக்கொள்க. பின்பனியாவது மாசித் திங்களும் பங்குனித் திங்களுமாம்.

அஃதற்றாக, இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ்வைந்திணைக் குரியவாறு என்னையெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும், வேனிற்காலத்து வெப்பமுழந்து மரனும், புதலும், கொடியும் கவினழிந்து கிடந்தன கார்ப்புயல்கள் முழங்கக் கவின்பெறுமாகலின் அப்பருவம் சிறந்ததாம். மாலைப்பொழுது அந்நிலத்திற் கின்றியமை யாத முல்லை மலருங்காலமாதலானும், அந்நிலத்துக் கருப் பொருளாகிய ஆனிரை வருங்காலமாதலானும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு அவை கண்டுழி வருத்த மிகுதலின், அதுவும் சிறந்ததாயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மை யும் களவிற் புணர்ச்சி பொருளாதலின், அப்புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமன்றே; அது கூதிர்காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவாரிலராகலின், ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கு அது சிறந்தது; நடு நாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. இனி மருதத்திற்கு நிலன் பழனஞ்சார்ந்த இடமாகலான், ஆண் டுறைவார் மேன்மக்களாகலின், அவர் பரத்தையிற் பிரிவுழி அம்மனையகத்து உறைந்தமை பிறரறியாமல் மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம் மனையகத்துப் பெயரும்வழி ஆண்டு மனைவி ஊடலுற்றுச் *சார்கிலளாம் ஆதலால், அவை அந்நிலத்திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும் பான்மையும் இரக்கம் பொருளாகலின், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதினும் இராப்பொழுது மிகு மாதலான் அப்பொழுது †வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார் இனி வருவது மாலை என்று வருத்தமுறுதலின்

* 'சார்கில்லாளாம்' எனவும் பிரதிபேதம்.

† 'வருத்தற்கேதுவாகிய எற்பாடு' எனவும் பிரதிபேதம்.

அதற்கு அது சிறந்தது. பாலைப் பொருளாவது பிரிவு; அப்பிரிவின்கண் தலைமகற்கு வருத்தமுறும் என்று தலைமகள் கவலுங்கால், நிழலும் நீரும் இல்லாதவழி ஏகினர் எனவும் கவலுமாகலின், அதற்கு அது சிறந்தது என்க. (கஎ)

**கஅ. இருவகைப் பிரிவு நிலைபெறத் தோன்றலு முரிய தாகு மென்மனார் புலவர்.**

இது, பாலைக்கு உரிய பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — இருவகைப் பிரிவான தலைமகளைப் பிரிதலும், தலைமகளை உடன்கொண்டு தமர்வரைப் பிரிதலும், அவை நிலைபெறத் தோன்றலும் பாலைக்கு உரிய பொருளாகும் என்ப புலவர் என்றவாறு.

உம்மை எச்சவும்மை யாகலான் நிலைபெறத் தோன்றாது பிரிதற் குறிப்பு நிகழ்ந்துழியும் பாலைக்குரிய பொருளாம் என்று கொள்க. அதிகாரப்பட்டு வருகின்றது பாலை யாகலின் இருவகைப் பொருளும் பாலைக்கு உரிய பொருளாயின. (கஅ)

**கசு. திணைமயங் குறுதலுங் கடிநிலை யிலவே**
**நிலனொருங்கு மயங்குத லில்லென மொழிப**
**புலனன் குணர்ந்த புலமை யோரே.**

இது, மேல் அதிகரிக்கப்பட்ட நிலத்தினும், காலத்தினும் ஆகிய திணை மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற்பொருளொடு சேரநிற்றல் கடியப்படாது ; ஆண்டு நிலம் சேரநிற்றல் இல்லை யென்று சொல்வர் புலன் நன்குணர்ந்த புலமையோர் என்றவாறு.

எனவே காலம் மயங்கும் என்றவாறாயிற்று. அதற்குச் செய்யுள் :

'தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தான்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போ
லெல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி
னல்லது மலைந்திருந் தறநெறி நிறுகல்லா
மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர
வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை ;
பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கட
றூவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிற
நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ ;
மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றி
னன்றுறை கொன்றன ரவரெனக் கலங்கிய
வென்றுய ரறிந்தனை நரறியோ வெம்போல
வின்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ ;
பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ
லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல
வினியசெய் தகன்றாரை யுடையையோ நீ ;
எனவாங்கு ;
அழிந்தய லறிந்த வெவ்வ மேற்படப்
பெரும்பே துறுதல் களைமதி பெரும
வருந்திய செல்லநீர் திறனறி யொருவன்
மருந்தறை கோடலிற் கொடிதே யாழநின்
னருந்தியோர் நெஞ்ச மழிந்துக விடினே.'

(கலித். செய் - கஉ)

எனவரும். (கச)

கரு. உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே.

இஃது, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இதன்பொருள் — உரிப்பொருள் அல்லாத கருப் பொருளும், முதற்பொருளும் மற்றொரு திணையொடு சேர நிற்கவும் பெறும் என்றவாறு.

உம்மை எதிர்மறை யாகலான் மயங்காமை பெரும் பான்மை என்க. எனவே 'உய்த்துக்கொண் டுணர்தல் என்னுந் தந்திர வுத்தியான் எடுத்தோதிய காலமாகிய முதற்பொருளும் பூவும் புள்ளும் ஆகிய கருப்பொருளும் மயங்கியும் மயங்காமையும் வரும். எனவே உரிப்பொருள் மயங்கி வாராது என்றவாறு. அல்லன மயங்கி வருதல் கலி முதலாகிய சான்றோர் நூலகத்துக் கண்டுகொள்க. உதாரணம்;

'ஒண்செங் கழுநீர்த் தண்போ லாயிதழ்
மூசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குய்மண் டாகஞ் செஞ்சாந்து நீவி.' (அகநா - சஅ)

என்றவழி, மருதத்திற்குக் கருப்பொருளாகிய கழுநீரும், குறிஞ்சிக்குரிய வெட்சிப்பூவும் அணிந்தோன் என்றமை யாற் கருப்பொருள் மயக்கமாயிற்று. பிறவுமன்ன (கரு)

கசு. புணர்தல் பிரித லிருத்த லிரங்க
லூட லவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.

இஃது, உரிப்பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் — புணர்தலும், பிரிதலும், இருத்தலும், இரங்கலும், ஊடலும், அவற்றின் நிமித்தமும் என்று

சொல்லப்பட்ட இவை ஆராயுங் காலத்து ஐந்திணைக்கும் உரிப்பொருளாம் என்றவாறு.

பிரிவு பாலைக்குரித்தாமாறு மேற்சொல்லப்பட்டது. ஏனைய, 'மொழிந்த பொருளோ டொன்ற வைத்தல்' என்னுந் தந்திரவுத்தியால் புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மை உரித்தாகவும், சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும். இருத்தலாவது தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல்; இரங்கலாவது ஆற்றாமை. (கசு)

கஎ. கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவ ணிரங்கலு
முண்டென மொழிப வோரிடத் தான.

இதுவும் ஒருசார் உரிப்பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் — கொண்டுதலைக் கழிதலும் உண்டு, பிரிந்தவண் இரங்கலும் உண்டு, ஒரோவிடத்துக்கண் என்றவாறு.

'உண்டு' என்பது இரண்டிடத்துங் கூட்டுக. அன்றியும் 'உண்டு' என்பதனை இல்லென்பதன் மாறுக்கி விரவு வினையாக்கிப் பொதுப்பட நின்றதெனவுமாம். 'ஓரிடத்து' என்றமையான் மேற்சொல்லப்பட்ட ஐவகை உரிப்பொருளும்போல எல்லாத் திணைக்கும் பொதுவாகி வருதலன்றி, 'கொண்டு தலைக்கழிதல்' பாலைக் கண்ணும், 'பிரிந்தவ ணிரங்கல்' பெருந்திணைக் கண்ணும் வரும் என்று கொள்க. கொண்டு தலைக்கழிதலாவது உடன்கொண்டு பெயர்தல்; அது நிலம் பெயர்தலின் புணர்தலின் அடங்காமையானும், உடன்கொண்டு பெயர்தலின் பிரிதலின் அடங்காமையானும் வேறோதப்பட்டது பிரிந்தவ ணிரங்கலாவது ஒருவரை யொருவர் பிரிந்தவிடத்து இரங்கல். அது நெட்

டாறு சென்றவழி இரங்குதலின்மையானும், ஒருவழித் தணந்தவழி ஆற்றுதலின்றி வேட்கை மிகுதியால் இரங்குதலானும் வேறோதப்பட்டது. அஃது ஏறிய மடற்றிறமும், தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமும் முதலாயின பொருள்; இது பெருந்திணைக்கு உரித்து. (கஎ)

கஅ. கலந்த பொழுதுங் காட்சியு மன்ன.

இதுவும் அது.

இதன்பொருள் — 'கலந்தபொழுது' என்பது தலைமகளைக் கண்ணுற்றவழி மனநிகழ்ச்சி யுளதாங் காலம் — அக்காட்சிப் பின்னர்க் குறிப்பறியுந் துணையும் நிகழும் நிகழ்ச்சி. 'காட்சி'யாவது தலைவியை எதிர்ப்படுதல் — குறிப்பறிந்தபின்னர்ப் புணருந்துணையும் நிகழும் நிகழ்ச்சி.

'முன்னிலை யாக்கல்' முதலாயின புணர்தல் நிமித்த மன்றே. இவை அந்நிகரனவன்றிப் பொதுப்பட நிற்றலின் வேறோதப்பட்டன.

'அன்ன' என்பது இவையும் ஓரிடத்து நிகழும் உரிப்பொருள் என்றவாறு. ஓரிடமாவது கைக்கிளை. அஃதேல், இவையும் புணர்தல் நிமித்தமாயினால் வருங் குற்றம் என்னையெனின், ஒருவன் ஒருத்தியை எதிர்ப்பட்டுழிப் புணர்ச்சி வேட்கை தோற்றலும் தோற்றாமையும் உண்மையின், காட்சி பொதுப்பட நின்றது. ஐயம் முதலாகக் குறிப்பறிதல் ஈறாக நிகழும் மனநிகழ்ச்சி தலைமகள் மாட்டுக் காமக்குறிப்பு இல்வழிக் காமக்குறிப்பு உணராது கூறுதலின் அதுவும் புணர்தல் நிமித்தம் அன்றாயிற்று என்க. ()

கக. முதலெனப் படுவ தாயிரு வகைத்தே.

இஃது, ஐயம் அறுத்தலை நுதலிற்று.

இதன்பொருள் — மேல் எடுத்து ஓதப்பட்டவற்றில் முதல் என்று சொல்லப்படுவது நிலமும் காலமும் ஆகிய அவ் விருவகையும் என்றவாறு.

எனவே ஏனையவெல்லாம் உரிப்பொருள் என்றவாறும். இதனாற் பெற்றது என்னையெனின், முதல் கரு உரிப்பொருள் என அதிகரித்து வைத்தார் இனிக் கருப்பொருள் கூறுகின்றார்; உரிப்பொருள் யாண்டுக் கூறினார் என ஐயம் நிகழுமதை விடுத்தல் என்க. (கசு)

உ௦. தெய்வ முணவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇய
வவ்வகை பிறவுங் கருவென மொழிப.

இது, கருப்பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் — தெய்வம் முதலாகச் சொல்லப்பட்டனவும் அத்தன்மைய பிறவும் கருப்பொருள் என்று மொழிப என்றவாறு.

அவையாவன முதற்பொருட்கட் டோன்றும் பொருள்.

'மாயோன் மேய காடுறை யுலகம்' (அகத் - ரு)

என்றதனான் முல்லைக்குத் தெய்வம் — கண்ணன்;

'காடுறை யுலகம்' (அகத் - ரு)

என்றதனானும்,

'காரு மாலையு முல்லை' (அகத் - சு)

என்றதனானும், காட்டினும் கார்காலத்தினும் மாலைப் பொழுதினும் நிகழ்பவை கொள்க;

'எந்நில மருங்கிற் பூவும் புள்ளு
மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்' (அகத் - உக)

என்றதனானும், நிலமும் காலமும் பற்றி வருவன கருப்பொருள் என்பது உணர்க. உணவு - வரகும், முதிரையும்; மா - மானும், முயலும்; மரம் - கொன்றையும்,

குருந்தும், புதலும்; புள் - கானங்கோழி; பறை - ஏறு கோட்பறை; செய்தி - நிரைமேய்த்தல்; 'யாழின் பகுதி' என்பது பண்; அது - சாதாரி: 'பிறவும்' என்றதனால், பூ - முல்லையும், பிடவும், தளவும்; நீர் - கான்யாறு; பிறவும் இந்நிகரன கொள்க

குறிஞ்சிக்குத் தெய்வம் — முருகவேள்; மைவரையுலகமும், கூதிர்காலமும், நள்ளிருளும் கூறினமையின், அந்நிலத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு - திணையும், வெதிர்நெல்லும், ஐவனமும்; மா - யானையும், புலியும், பன்றியும், கரடியும்; மரம் - வேங்கையும், கோங்கும்; புள் - மயிலும், கிளியும்; பறை - வெறியாட்டுப்பறையும், தொண்டகப்பறையும்; செய்தி - தேனழித்தல்; பண் - குறிஞ்சி; 'பிறவும்' என்றதனால், பூ - வேங்கைப்பூவும், குறிஞ்சிப்பூவும், காந்தட்பூவும்; நீர் - சுனைநீரும், அருவிநீரும்; பிறவும் அன்ன.

பாலைக்கு நிலம் ஓதாது வேனிற்காலமும், நண்பகலும் ஓதினமையானும்,

'முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்'

(சிலப். காடுகாண் - கூ௪ - கூஎ)

எனப் பிற சான்றோர் செய்யுளகத்து வருதலானும், இந்நிலங்களில் வேனிற்காலத்து நிகழ்வன கருப்பொருளாகக் கொள்ளப்படும்; தெய்வம் - கொற்றவை; உணவு - ஆறலைத்தலால் வரும்பொருள்; மா - வலியழிந்த யானையும், வலியழிந்த புலியும், வலியழிந்த செந்நாயும்; மரம் - பாலை, இருப்பை, கள்ளி, சூரை; புள் - எருவையும், பருந்தும்; பறை - ஆறலைப் பறையும், சூறைகொண்ட பறையும்; செய்தி - ஆறலைத்தல்; பண் - பாலை; 'பிறவும்' என்றதனால், பூ - மராம்பூ; நீர் - அறுநீர்க் கூவலும், அறுநீர்ச்சுனையும்; பிறவும் இந்நிகரன கொள்க.

மருதத்திற்குத் தெய்வம் — இந்திரன் ;

'தீம்புன லுலகம்' (அகத் - ரு)

எனவும்,

'வைகறை விடியல்' (அகத் - க)

எனவும், ஓதினமையால் அவ்விடத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு - நெல் ; மா - எருமையும், நீர்நாயும் ; மரம் - மருதும், காஞ்சியும் ; புள் - அன்னமும், அகன்றிலும் ; பறை - நெல்லரிபறை ; செய்தி - உழவு ; பண் - மருதம் ; 'பிறவும்' என்றதனால், பூ - தாமரையும், கழுநீரும் ; நீர் - யாற்று நீரும், பொய்கை நீரும் ; பிறவும் அன்ன.

நெய்தற்குத் தெய்வம் — வருணன் ;

'மணலுலகம்' (அகத் - ரு)

என்றதனானும்,

'எற்பாடு' (அகத் - க0)

என்றதனானும், ஆண்டு நிகழ்பவை கொள்க. உணவு ; உப்புவிலையும், மீன்விலையும் ; மா - கராமும், சுறவும் ; மரம் - புன்னையும், கைதையும் ; புள் - கடற்காக்கை ; பறை - நாவாய்ப்பறை ; செய்தி - மீன் படுத்தலும், உப்பு விளைத்தலும் ; பண் - செவ்வழி ; 'பிறவும்' என்றதனால், பூ - நெய்தல் ; நீர் - கேணிநீரும், கடல்நீரும் ; பிறவும் அன்ன. (உ0)

உக. எந்நில மருங்கிற் பூவும் புள்ளு
மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்.

இது, மேதலற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — யாதானுமோர் நிலத்திற்கு உரிய வாகிய பூவும் புள்ளும் அந்நிலத்தோடும் பொழுதோடும் வந்திலவாயினும் வந்த நிலத்தின் பயத்தவாகும் என்ற வாறு.

'வந்ததுகொண்டு வாராதது முடித்தல்' என்பதனால் சிறுபான்மை ஏனையவும் வந்த வழிக் கண்டுகொள்க. இவ்வாறு வருவன திணை மயக்கமாம். (உக)

உஉ. பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே.*

இது கருப்பொருளின் பாகுபாடாகிய மக்கட்டிறம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — குலப்பெயரும் தொழிற்பெயரும் என இருவகைப்படும், அத்திணைதொறும் மருவிப்போந்த திணைநிலைப்பெயர் என்றவாறு.

'திணைநிலைப்பெயர்' என்றதனான் அப்பெயருடையார் பிறநிலத்திலர் என்று கொள்ளப்படும். அதனானே எல்லா நிலத்திற்கும் உரியராகிய மேன்மக்களை யொழித்து, நிலம் பற்றி வாழும் கீழ்மக்களையே குறித்து ஓதினார் என்று கொள்க. பெயர் என்றதனாற் பெற்றது என்னை? மக்கள் எனல் அமையாதோ எனின், மக்களாவார் புள்ளும் மாவும்போல வேறு பகுக்கப்படா ஒருநீர்மையராதலின் அவரை வேறு படுக்குங்கால் திணைநிலைப்பெயரா னல்லது வேறுபடுத்தல் அருமையின் 'பெயர்' என்றார் என்க. (உஉ)

உங. ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய
ராவயின் வரூஉங் கிழவரு முளரே.

இது, நிறுத்தமுறையானே முல்லைக்கு உரிய மக்கட் பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

* 'திணைநிலைப் பெயரே' எனவும் பிரதிபேதம்.

இதன் பொருள் — ஆண்மக்களைப்பற்றி வரும் திணைநிலப்பெயர் ஆயர் எனவும் வேட்டுவர் எனவும் வரும்: அவ்விடத்து வரும் கிழவரும் உளர் என்றவாறு.

ஆயர் என்பார் நிரை மேய்ப்பார். வேட்டுவர் என்பார் வேட்டைத்தொழில் செய்வார். வேட்டு - ஒரு தொழில்; அஃது எயினர் என்னும் குலப்பெயருடையார் மேல் தொழிற்பெயராகி வந்தது. 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனான் 'ஆய்ச்சியர்' எனவுங் கொள்க. அவ்விருதிறத்தாருங் காடுபற்றி வாழ்தலின் அந்நிலத்தின் மக்களாயினர். 'ஆவயின் வரூஉங் கிழவர்' இருவகையர்; அந்நிலத்தை ஆட்சிபெற்றோரும் அந்நிலத்துள்ளோரும் என. குறும்பொறை நாடன் என்றாற் போல்வன ஆட்சிபற்றி வரும். பொதுவன், ஆயன் என்பன குலம்பற்றி வரும். (உரு)

உச. ஏனோர் மருங்கினு மெண்ணுங் காலை
யானு வகைய திணைநிலைப் பெயரே.

இது, குறிஞ்சி முதலாய திணைக்கண் வரும் திணைநிலைப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஏனை நிலத்துள்ள மக்கண்மாட்டு ஆராயுங்காலத்து அவ்விடத்து அவ்வகைய திணைநிலைப் பெயர் என்றவாறு.

என்றது, திணைதொறும் குலப்பெயரும் தொழிற்பெயரும் கிழவராம் பெயரும் வரும் என்றவாறாம். 'ஆன்' என்பது அவ்விடம். 'அ' என்னும் சுட்டு நீண்டு இசைத்தது. குறிஞ்சிக்கு மக்கட்பெயர் குறவன், குறத்தி என்பன; தலைமக்கட்பெயர் மலைநாடன், வெற்பன் என்பன. பாலைக்கு மக்கட்பெயர் எயினர் எயிற்றியர் என்பன; தலைமக்கட்பெயர் மீளி, விடலை என்பன. மருதத்திற்கு மக்கட்பெயர் உழவர், உழத்தியர் என்பன; தலைமக்கட்

பெயர் ஊரன், மகிழ்நன் என்பன. நெய்தற்கு மக்கட் பெயர் நுளையர், நுளைச்சியர் என்பன; தலைமக்கட்பெயர் சேர்ப்பன், துறைவன், கொண்கன் என்பன. பிறவுமன்ன.

'கைக்கிளை முதலா' (அகத் - கூ)

என்னும் சூத்திரம் முதல் ஆக இத்துணையும் கூறப் பட்டது, நடுவணைந்திணையாவது நிலத்தானும் காலத் தானும் கருப்பொருளானும் உரிப்பொருளானும் நில மக்களானும் தலைமக்களானும் வரும் எனவும், அவை இலக்கண நெறியானும் வழக்கு நெறியானும் வரும் என வும், கைக்கிளை பெருந்திணை உரிப்பொருளான் வரும் எனவும் ஓதியவாறு.

உதாரணம்: முல்லைத்திணைக்குச் செய்யுள் —

'முல்லை வைந்நுதி தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறங் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வரங்குவளை பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரி
னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத்து மன்ற காந்தட்
போதவி, ழலரி நாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே.' (அகம் - ச)

எனவரும்.

இதனுள், முல்லைக்கு உரித்தாகிய நிலமும், காலமும், கருப்பொருளும், இருத்தலாகிய உரிப்பொருளும் வந்த வாறு கண்டுகொள்க.

'இல்லொடு மிடைந்த கொல்லை முல்லைப்
பல்லான் கோவலர் பையு ளாம்பல்
புலம்புகொண் மாலை கேட்டொறுங்
கலங்குங்கொ லளியணங் காத லோளே.'

என்பதூஉம் அது.

'திருநகர் விளங்கு மாசில் கற்பி
னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை யெவனோ முல்லை
யிரும்பல் கூந்த னாற்றமு
முருந்தேர் வெண்ப லொளியுநீ பெறவே.'

இது முதற்பொருள் வாராது கருப்பொருளானும் உரிப்பொருளானும் முல்லையாயிற்று.

'கரந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
யிளைய ரேவ வியங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தனர்நங் காத லோரே.'

இது முதலும் கருவும் இன்றி உரிப்பொருளான் முல்லையாயிற்று.

'கதிர்கை யாக வாங்கி ஞாயிறு
பைதறத் தெறுதலிற் பயங்கண் மாறி
வீடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலங்
காடுகவி னெதிரக் கனமழை பொழிதலிற்
பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுட
னறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
வெறிவென் றன்றே வீகமழ் கானம்
மெவன்கொல் மற்றவன் நிலையென மயங்கி
யிரும்பணி யுறைக்கும் கண்ணொ டினைபாங்
கின்னா வுறைவித் தொன்னலம் பெறாஉ

மீதுற்ற காலங் கண்டிசிற் பகைவர்
மதின்முகடு கதவமு முருக்கிய மருப்பிற்
கந்துகா லொசிக்கு மேயானை
வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே.'

(அகம் - ௧௬௫)

இது பிரிதற் பகுதியாகிய பாசறைப் புலம்பல் எனினும் நிலம்பற்றி முல்லையாயிற்று.

'மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்.'

(கலி. முல்லை - ௪)

என்னும் முல்லைக்கலி புணர்தற் பொருண்மைத்தாயினும், முல்லைக்கு உரிய கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்று. பிறவும் அன்ன.

குறிஞ்சித்திணைக்குச் செய்யுள் —

'விடிந்த ஞாலங் கவின்பெறத் தலைஇ
யிடிந்த வாய வெவ்வங் கூர
நிலமலி தண்டுளி தவிராது புலந்தாய்
நீர்மலி கடாஅஞ் செருக்கிக் கான்மலைந்து
கணைபெயல் பொழிந்த நள்ளென் யாமத்து
மண்புரை* மாசுணம் விலங்கிய நெறிய
மலைஇ மணந்த மயங்கரி லாராற்
றிலைபொலிந் திலங்கு வைவே லேந்த
இரும்பிடி புணர்ந்த செம்மல் பலவுடன்
பெருங்களிற்றுத் தொழுதியொ டெண்குநிறை யொரீஇய
நிரம்பா நெடுவரை தத்திக் குரம்பைந்
தீண்டுபெயி லெறும்பி னிழிதரு மருவிக்
குண்டுநீர் மறுசுழி நீந்தி யொண்டொடி
யலமரன் மழைக்க ணல்லோள் பண்புநயந்து
சுரன்முத லாரிடை நீந்தித் தந்தை
வளமனை யொருசிறை நின்றனே மாகத்
தலைமனைப் படலைத் தண்கமழ் நறுந்தா

* 'யாமத்துப் பண்புரை' எனவும் பிரதிபேதம்.

தாதீவண் டிமிரிசை யுணர்ந்தனள் சீறடி
யரிச்சிலம் படிக்குச் சேக்கையி னியலிச்
செறிநினை நல்லி லெறிகத வுயவிய
காவலர் மடிபத நோக்கி யோவியர்
பொறிசெய் பாவையி னறிவுதளர் பொல்கி
யளக்க ரன்ன வாரிரி மிய
விளக்குநிமிர் பனைய மின்னிப் பாம்பு
படவரைச் சீக்கு முருமேறு டிணைப்பெய
வின்னலங் கங்குலும் வருபவோ வென்றுதன்
மெல்விரல் சேப்ப நொடியின னல்யாழ்
வடியுறு நரம்பிற் றீவிய மிழற்றித்
திருகுபு முயங்கி யோளே வென்வேற்
களிறுகெழு தானை கழறொடி மலைய
னொளிறுநீ ரடுக்கங் கவைஇய காந்தண்
மணங்கமழ் முள்ளூர் மீமிசை
யணங்குகடி கொண்ட மலரினுங் கமழ்ந்தே.'

எனவரும். இது முதலும், கருவும், புணர்தலாகிய உரிப்பொருளும் வந்த குறிஞ்சிப் பாட்டு.

'நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற் — பிறையெதிர்ந்த
தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன வீண்டு.' (திணைமாலை - க)

இது முதற்பொருளின்றிக் கருப்பொருளும் உரிப்பொருளும் வந்தமையால் குறிஞ்சித்திணையாயிற்று.

'முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையு ளொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.'

(யாப் - விருத். எங உரை மேற்கோள்)

இஃது உரிப்பொருள் ஒன்றும் வந்த குறிஞ்சிப்பாட்டு.

'பருவ மென்றினை பாலும் பெய்தன
கருவிரற் கிள்ளை கடியவும் போகா
பசுமூ தந்திக் கடைவன வாடப்

பாசிப் பக்கப் பனிநீர்ப் பைஞ்சுனை
விரியிதழ்க் குவளை போல வில்விட்
டெரிசுடர் விசும்பி னேறெழுந்து முழங்கக்
குன்றுபனி கொள்ளுஞ் சார
லின்றுகொ ளேழி யவர்சென்ற நாட்டே.'

இஃது இருத்தற் பொருண்மைக்கண் வந்ததேனும் முதற்பொருளானும், கருப்பொருளானும் குறிஞ்சியாயிற்று.

'வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பி னல்லது — கோடா
வெழிலு முலையு மிரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து.' (திணைமாலை - கரு)

இது கற்பிற்புணர்வு; பொருளாற் குறிஞ்சியாயிற்று.

'படாஅ தோழியெங் கண்ணே கொடுவரி
கொன்முரண் யானை கனவு
நன்மலை நாட னசைஇ னேனே.'

இஃது இரங்கற் பொருண்மைத்தேனும் முதற்பொருளானும் கருப்பொருளானும் குறிஞ்சியாயிற்று. பிறவும் அன்ன.

பாலைத்திணைக்குச் செய்யுள் —

'அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளங்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி றெறித்த விடுவாய் நிறைய
நெடுங்கான் முருங்கை வெண்பூத் தாஅய
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சி
லுள்ளுநன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
விழுத்தொடை மறவர் வில்லிடை வீழ்ந்தோ
ரெழுத்துடை நடுக லின்னிழல் வதிய
மருஞ்சுரக் கவலை நீந்தி யென்று

மில்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லோர் நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காத
லருளே காதல ரென்றி நீயே.' (அகம் - ருந)

என வரும். இதனுள் பாலைக்குரிய முதற்பொருளும், கருப்பொருளும், பிரிவும் வந்தவாறு கண்டுகொள்க.

வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினு
மினந்துணை யாயமொடு கழங்குட னாடினு
முயங்கின் றனையென் மெய்யென் றசைஇ
மய்ங்குவியர் பொறித்த நுதல டண்ணென
முயங்கினள் வதியும் மன்னே யினியே
தொடிமாண் சுற்றமு மெம்மு முள்ளா
ணெடுமொழித் தந்தை யருங்கடி நீவி
நொதும லாள னெஞ்சறப் பெற்றவென்
சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்லத் தாமே கல்லென
வூரெழுந் தன்ன வுருகெழு செலவி
னீரி லத்தத் தாரிடை மடுத்த
கொடுங்கோ லுமணர் பகடுதெழி தெள்விளி
நெடும்பெருங் குன்றத் திமிழ்கொள வியம்புங்
கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கற்
பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்
தருஞ்சுரக் கவலை யதர்படு மருங்கி
னீளரை யிலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத்தலைக் கொண்ட பழவிறன் மூதூர்
நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனிற் றோன்று
மைபடு மாமலை விலங்கிய சுரனே. (அகம் - கள)

இஃது உடன்போக்கின்கண் வந்தது.

'நாளு நாளு மாள்வினை யழுங்க
வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெனு
வொண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே.' (சிற்றடக் - பாலை)

இது பிரிவு. பொருளாற் பாலையாயிற்று.

'உயர்கரைக் கானியாற் றவிரற லகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் றடமென் றோளே.' (ஐங்குறு-ங௬௧)

இது புணர்தற்பொரு ளாயினும் கருப்பொருளாற் பாலையாயிற்று.

'செந்துவ ராடை' (ஐங்குறு - ங௬ங)

என்னும் பாட்டினுள்,

'கொலைவி லெயினர் தங்கை'

எனப் புணர்தற் பொருண்மை வந்ததாயினும் பாலைக்கு உரிய மக்கட்பெயர் கூறுதலிற் பாலையாயிற்று. பிறவும் அன்ன.

மருதத்திணைக்குச் செய்யுள் —

'சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னொண்டுளை பரீஇக்
கூர்முள் வேலி கோட்டினி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிர்வருந் தாழிருங் கூந்தற்
பிறழு மொருத்தியை யெம்மனைத் தந்து
வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்
மொண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ.' (அகம் - சசு)

எனவரும். இதனுள் மருதத்திற்குரியவாய் ஓதிய நிலனும், பொழுதும், கருப் பொருளும், ஊடற் பொருண்மையும் வந்தன.

'தாமரை, வண்டூது பனிமல ராரு மூர'

என்றமையான் வைகறை வந்தமை யறிக; இறைவன் தன்மையும் அறிக.

"பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை
முன்னும் பின்னு மாகி
யின்னும் பாண னெம்வயி னோனே.'

இஃது உரிப்பொருளால் மருதமாயிற்று.

'ஓரை யாய மறிய வூர
னல்கினன் றந்த நறும்பூந் தண்டழை
மாறுபடி னெவனோ தோழி வீறுசிறந்து
நெடுமொழி விளங்குந் தொல்குடி
வடுநாம் படுத லஞ்சுது மெனவே.'

இது புணர்தற் பொருண்மையேனும் திணைநிலைப் பெயரால் மருதமாயிற்று. பிறவும் அன்ன.

நெய்தல் திணைக்குச் செய்யுள் —

'கானன் மலர்ந்த கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
வசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
யழிதக வந்த கொண்டலொடு கழிபடர்
காமர் நெஞ்சங் கையறு பிணையத்
துயரஞ் செய்துநம் மருளா ராயினு
மறாஅ வியரோ வவருடைக் கேண்மை
யளியின் மையி னவணுறைவு முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெல் லரிஞர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ளாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை

யகமடற் சேக்குந் துறைவ
னின்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே.'
(அகம் - ௪௦)

எனவரும். இது முதலும், கருவும், இரங்குதற் பொருண்மையும் வந்த நெய்தற் பாட்டு.

'அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி
யேதின் மாக்களு நோவர் தோழி
யென்று நோவா ரில்லைத்
தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே.'
(யாப். விருத். உக உரை மேற்.)

இது திணைநிலைப் பெயரானும் இரங்கற்பொருண்மை யானும் நெய்தலாயிற்று.

'கங்குலும் பகலுங் கலந்துக வொன்றி
வன்புறை சொல்லி நீத்தோ
ரன்புறு செய்தி யுடையரோ மற்றே.'

இஃது இரங்கற் பொருண்மையான் நெய்தலாயிற்று.

'சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி வைகலு
*மிரவுக்குறிக் கொண்கனும் வந்தனன்
விரவுமணிக் கொடும்பூண் விளங்கிழை யோயே.'
(சிற்றடக்கம் - நெய்தல்)

இது புணர்தற் பொருளாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று.

'கோட்டக மலர்ந்த கொழுங்கொடி யடம்பி
னற்றுறை யணிநீர்ச் சேர்ப்பவிப்
பொற்றொடி யரிவையைப் போற்றினை யளிமே.'

இது பாலைக்கு உரித்தாகிய பிரிவு நிமித்தமாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று. பிறவும் அன்ன. (உச)

* 'மிரவுக்குறிக் கையென்கண் வந்தனன்' எனவும் பிரதிபேதம்.

**௫௫. அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினுங்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்.**

இது நடுவணைந்திணைக்கு உரிய தலைமக்களைக் கூறி, அதன் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக்கு உரிய மக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — அடித்தொழில்* செய்வார் பக்கத்தினும் வினைசெய்வார் பக்கத்தினும் மேற் சொல்லப் பட்ட புணர்தல் முதலான பொருளைக் கூறல் கடிந்து நீக்கும் நிலைமை யில்லை, ஐந்திணைப் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக்கண் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

'புணர்தல் முதலான பொருள்' என்பது அதிகாரத் தான் வந்தது. 'வினைசெய்வார்' என்பதனால் அடியார் அல்லாதார் என்பது கொள்க. அவர் அகத்திணைக்கு உரியர் அல்லரோ எனின், அகத்திணையாவது அறத்தின் வழாமை யும், பொருளின் வழாமலும், இன்பத்தின் வழாமலும் இயலல்வேண்டும்; வேண்டுமவை யெல்லாம் பிறர்க்குக் குற்றேவல் செய்வார்க்குச் செல்லுதல் அரிதாகலானும், அவர் நாணுக்குறைபாடு உடையர் ஆகலானும், குறிப்பறி யாது வேட்கைவழியே சாரக் கருதுவர் ஆகலானும், இன்பம் இனிது நடத்துவார் பிறரேவல் செய்யாதார் என்பதனானும், பிறவானும் அவர் புறப்பொருட்கு உரிய ராயினர் என்க. எனவே, இவ்வெழுவகைத் திணையும் அகம், புறம் என இருவகையாயின.

உதாரணம் :

'என்னோற் றனைகொல்லோ
நீரு ணிழற்போ னுடங்கிய மென்சாய
லீங்குருச் சுருங்கி,
யியலுவாய் நின்னொ டுசாவுவெ னின்றீத்தை;

* 'அடிமைத்தொழில்' எனவும் பிரதிபேதம்.

அன்னையோ,
காண்டகை யில்லாக் குறளுழிப் போழ்தின
ளுண்டலைக் கின்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று;
மாண்ட,
எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரா லென்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லே
னீநல்கி னுண்டென் னுயிர்;
குறிப்புக்காண்,
வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை
யில்லத்து வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டி ருளர்மன்னோ கூறு;
நல்லாய்கேள்,
உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் புல்லல் சிறிது;
போசீத்தை,
மக்கண் முரியேநீ மாறினித் தொக்க
மரக்கோட்டஞ் சேர்ந்தெழுந்த பூங்கொடி போல
நிரப்பமில் யாக்கை தழீஇயின ரெம்மைப்
புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையன்
பக்கத்துப் புல்லீயா யென்னுமாற் றொக்க
வுழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னி
னிழிந்ததோ கூனின் பிறப்புக் கழிந்தாங்கே
யாம்வீழ்து மென்றுதன் பின்செலவு முற்றீயாக்
கூனி குழையுங் குழைவுகாண்;
யாமை,
யெடுத்து நிறுத்தற்றாற் றோளிரண்டும் வீசி
யாம்வேண்டே மென்று விலக்கவு மெம்வீழுங்
காமர் நடக்கு நடைகாண் கவர்கணைச்

சாமனார் தம்முன் செலவுகாண்;
ஓஒகாண், நம்மு ணகுதற் றொடீஇயர் நம்முண
முசாவுவங் கோனடி தொட்டேன்;
ஆங்காக,
சாயலின் மார்ப வடங்கினேன் ஏஎ
பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாஅமை வேண்டுவல்
தண்டாத் தகடுருவ வேறாகக் காவின்கீழ்ப்
போதரகடாரப் புல்லி முயங்குவேந்
துகடீர்பு காட்சி யவையத்தா ரோலை
முகடுகாப் பியாத்துவிட் டாங்கு.' (கலி. மரு - ௨௯)

எனவரும்.

இதனுள் ஒருவரை யொருவர் இழித்துக் கூறினமை யான் அடியார் என்பதூஉம், மிக்க காமத்தின் வேறுபட்டு வருதலாற் பெருந்திணைப்பாற்படும் என்பதூஉம் கண்டு கொள்க. இதுதானே கைக்கிளைக்கும் உதாரணமாம். வினைவலர்மாட்டு வருவன வந்தவழிக் காண்க. (௨௫)

## ௨௬. ஏவன் மரபி னேனோரு முரிய ராகிய நிலைமை யவரு மன்னர்.

இதுவும் கைக்கிளை பெருந்திணைக்கு உரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேற்சொல்லப்பட்ட அடியோரும், வினைவல்லரும், ஏவுதல் மரபையுடைய ஏனையோரும் கைக்கிளை பெருந்திணைக்கு உரியர், அவரும் உரியராகிய நிலைமை, அத்தன்மைய ராகலான் என்றவாறு.

அவரும் ஆகிய நிலைமை என மொழி மாற்றுக. கைக்கிளை பெருந்திணை என்றல் அதிகாரத்தான் வந்தது. இதனாற் சொல்லியது தலைமக்களும் கைக்கிளை பெருந்திணைக்கு உரியரார்வர் என்பதாம். உரியராயினவாறு அறம் பொருள் இன்பங்கள் வழுவா மகளிரைக் காதலித்தலான் என்றவாறாயிற்று.

உதாரணம் :

'எஎ யிலைதொத்த ஞணிலன் றன்னொடு
மேலேமென் பாரையு மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினே னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று;
சுடர்த்தொடீ,
போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயி னல்லது நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண் பவர்;
செய்வ த்றிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
ஐவா யரவி னிடைப்பட்டு நைவாரா
மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலு மறனெனக் கண்டன்று
அறனு மதுகண்டற் றாயிற் றிறனின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரும் பண்டுநாம்
வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு.' (கலி. குறி - உகூ)

எனவரும். இதனுள்,

'வெளவிக் கொளலு மறனெனக் கண்டன்று'

எனவும்,

'நீர்க்கினிதென், றுண்பவோ நீருண் பவர்'

எனவும் தலைமகன் கூறுதலானும், தலைமகள் * முனிந்து உரைத்தலானும், ஊடி யுணர்வாள் போலத் தலைமகள் உடன்பட்டமையானும், இஃது உயர்ந்தோர்மாட்டு வந்த கைக்கிளை. பெருந்திணை வந்தவழிக் கண்டு கொள்க. (உகூ)

* 'முன்னிழித்து உரைத்தலானும்' எனவும் பிரதிபேதம்.

## உ௭. ஓதல் பகையே தூதிவை பிரிவே.

இது, மேல் கைக்கிளை முதலாக எழுதிணையும் உணர்த்தினர். அவற்றுள் நிலம் பகுக்கப்பட்ட முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நான்கு திணையும் களவு கற்பு என்னும் இருவகைக் கைகோளினும் நிகழ்தலின் அவற்றை யொழித்து, நிலம் பகுக்கப்படாத கைக்கிளை பெருந்திணையும் பாலையும் இவ்வோத்தினுள் உணர்த்தப் படுகின்றன வாதலின், அவற்றுள் பாலைக்கு உரித்தாகிய பிரிவு உணர்த்துவான், பிரிவுக்கு நிமித்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஓதலும் பகையும் தூதும் என்று சொல்லப்பட்ட இத்தன்மைய பிரிவிற்கு நிமித்தமாம் என்றவாறு.

'இவை' என்பது இத்தன்மைய என்னும் பொருள் பட நின்றது. நிமித்தம் என்பது உய்த்துணர்ந்து கொள்ளக் கிடந்தது.

ஓதற்குப் பிரிதலாவது — தமது நாட்டகத்து வழங்காது பிற நாட்டகத்து வழங்கும் நூல் உளவன்றே, அவற்றினைக் கற்றல் வேண்டிப் பிரிதல்.

பகைவயிற் பிரிதலாவது — மாற்று வேந்தரொடு போர் கருதிப் பிரிதல்.

தூதிற்குப் பிரிதலாவது — இரு பெரு வேந்தரைச் சந்து செய்தற்பொருட்டுப் பிரிதல். (உ௭)

## உ௮. அவற்றுள்
## ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன.

இது மேற் கூறப்பட்டவற்றுள் ஓதற்கும் தூது போதற்கும் உரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேற்கூறப்பட்டவற்றுள் ஓதல் காரணமாகப் பிரியும் பிரிவும், தூதாகிப் பிரியும் பிரிவும்,

நால்வகை வருணத்தினும் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிய என்றவாறு.

இவர் ஒழுக்கத்தானும், குணத்தானும், செல்வத்தானும் ஏனையரினும் உயர்புடையர் ஆதலான் 'உயர்ந்தோர்' என்றார். உதாரணம்:

'வயலைக் கொடியின் வாடிய மருங்கு
லுயவ லூர்திப் பயலைப் பார்ப்பா
னெல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
யேணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனனே' (புறம் - ௩0௫)

எனவரும்.

இதனுள் பார்ப்பான் தூதாகியவாறு கண்டுகொள்க. அரசர் தாம் தூதாகியவாறு வாசுதேவனால் உணர்க. (உ௮)

உ௯. தானே சேறலுந் தன்னொடு சிவணி
" யேனோர் சேறலும் வேந்தன் மேற்றே.

இது பகைவயிற் பிரிதற்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — பகைவர் காரணமாகி அரசன் தானே சேறலும், அவனொடு கூடி ஒழிந்தோர் சேறலும் வேந்தன்கண்ணது என்றவாறு.

பகை யென்றது மேனின்ற அதிகாரத்தான் உய்த்துணர்ந்து கொள்ளக் கிடந்தது. 'தானே' என்னும் ஏகாரம் பிரிநிலை; படையையொழிய என்றவாறும். எனவே போரைக் குறித்துப் பிரிதலும் அரசர்க்கு உரித்தென்று கொள்க. இதனுள் அரசன் தலைமகனுழிப் *'பகைதணிவினைப்' பிரிவு எனவும், அவனொடு சிவணி ஏனோர் தலைவராயுழி *'வேந்தற்கு உற்றுழிப்' பிரிவு எனவும் இதனை இருவகையாகக் கொள்க. (உ௯)

* இறை. களவி - ௩௫.

௩௰. மேவிய சிறப்பி னேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியு
மிழைத்த வொண்பொருண் முடியவும் பிரிவே.

இது மேற்சொல்லப்பட்ட மூவகை நிமித்தமு மன்றி வருவன உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய என்பது — நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்பையுடைய மக்களையல்லாத தேவரது படிமையவாகிய பொருள்கள் என்றவாறு; முல்லை முதலாச் சொல்லிய என்பது — முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய நிலத்தின் மக்கள் என்றவாறு; முறையாற் பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும் பிரிவே என்பது — மேற் சொல்லப்பட்ட முறைமையில் தப்பியவழித் தப்பாது அறம் நிறுத்தற் பொருட்டும் பிரிவுளதாம் என்றவாறு; இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே என்பது — செய்யப்பட்ட பொருள் முடிய வேண்டியும் பிரிவு உளதாம் என்றவாறு.

எனவே, தேவர் காரணமாகவும், அறங் காரணமாக வும், முறைமை கோடிய மக்களை முறைமை செய்வித்தல் காரணமாகவும், பொருள் ஆக்குதல் காரணமாகவும் பிரிவு உளதாம் என்றவாறு.

'காவல்', 'பொருட் பிரிவு' எனப் * பிறநூலகத்து ஓதப்பட்ட இருவகைப் பிரிவும் ஈண்டு ஓதப்பட்டதென்று கொள்க. 'மேவிய' என்பது,

'மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்.' (அகத்தி - ரு)

என்பதனால் நால்வகை நிலத்தினும் மேவிய எனப் பொருளாயிற்று. 'சிறப்பினேனோர்' என்றதனால் சிறப்புடையார்

* இறை. களவி - ௩௫.

மக்களுந் தேவருமாகலின், மக்கள் அல்லாதாரே தேவர் என்று பொருளாயிற்று. 'படிமை' என்பது ப்ரதிமா என்னும் வடமொழித் திரிபு. அது தேவர்க் கொப்புமையாக நிலத்தின்கட் செய்தமைத்த தேவர்மேல் வந்தது.' அவருடைய பொருளாவன பூசையும் விழாவும் முதலாயின.

'முல்லை முதலாச் சொல்லிய' என்பது

'பிறந்த வழிக் கூறல்' (வேற். மயங் - ௩௧)

என்னும் ஆகுபெயரான் அந்நிலத்தின் மக்களை நோக்கிற்று. 'பிரிவு' என்பதனைப் 'பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்' பிரிவுளதாம். 'இழைத்த வொண்பொருண் முடியவும்' பிரிவுளதாம் என இரண்டிடத்துங் கூட்டுக. ஆம் என்பது எஞ்சி நின்றது.

தேவர் காரணமாகப் பிரியும் பிரிவுக்குச் செய்யுள் —

'அரம்போ ழவ்வளை தோணிலை ஞெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
யீர்ங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை
யாலி யன்ன வாலவீ தாஅய்
வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅ மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் திழிதரப்
பனிபட நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வலவரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற

வொன்பது கொடையும் நன்பக லொழித்த
பீடின் மன்னர் போல
வோடுவை மன்னுல் வாடைநீ யெமக்கே' (அகம் - கஉச)

எனவரும்.

சேரன் செங்குட்டுவனுர் கண்ணகியைக் கடவுண் மங்கலஞ் செய்தற்குப் பிரிந்த பிரிவு சிலப்பதிகாரத்திற் கண்டுகொள்க. இத்துணையும் பிரிவு அறுவகைப்படும் என்றவாறாயிற்று. அஃதேல் பரத்தையிற் பிரிவு என்பதோ எனின், அது நிலம் பெயர்ந்து உறையாமையானும், இவைபோற் சிறக்காமையானும், அறமுறைமை செய்தலும் பொருள் காரணமாகப் பிரிதலும் இன்றிப் பிரிதலினானும், கற்பியலுட் கூறப்படும் என்க. ஈண்டுஞ் சிறுபான்மை கூறுப. (௩0)

## ௩க. மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே.

இது நிறுத்த முறையானே அறங் காரணமாகப் பிரிதற்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேலோராகிய தேவரது முறைமையை நிறுத்தற்குப் பிரியும் பிரிவு நான்கு வருணத்தார்க்கும் உரித்து என்றவாறு. (௩க)

## ௩உ. மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப.

இது காவற்பகுதியாகிய முறை செய்வித்தற்கு உரிய மக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மன்னர்பாங்கு — மன்னர்க்குரிய பக்கம், அஃதாவது காவல்; அது நெறியின் ஒழுகாதாரை நெறியின் ஒழுகப் பண்ணுதல். பின்னோர் ஆகுப — அவ்வாறு முறை செய்தற்கு அரசன் தான் சேறல் வேண்டாமையின், அதற்குரியராய் அவனது ஏவல்வழி வரும் வணிகரும் வேளாளரும் உரியராகுப என்றவாறு.()

௩௩. உயர்ந்தோர்க் குரிய வோத்தி ஞன.

இது வணிகர்க்கு உரியதோர் பிரிவு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேல் அதிகரிக்கப்பட்ட பின்னோ ராகிய இருவகை யோரினும் உயர்ந்தோராகிய வணிகர்க்கு ஓதுதல் நிமித்தமாகப் பிரிதலும் உரித்து என்றவாறு.

ஒத்துப் பலவாதலின் 'உரிய' என்றார். ஈண்டு ஒத்து என்பது வேதம்; அது நால்வகை வருணத்தினும் மூவர்க்கு உரித்தென்பது இத்துணையெனக் கூறப் பட்டது. (௩௩)

௩௪. வேந்துவினை யியற்கை வேந்த ஞெரீஇய
வேஞேர் மருங்கினு மெய்திட னுடைத்தே.

இது வணிகர்க்கும் வேளாளர்க்கும் உரியதோர் பிரிவு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — வேந்தனது வினை இயற்கையாகிய தூது வேந்தனை யொழிந்த வணிகர்க்கும் வேளாளர்க்கும் ஆகுமிடன் உடைத்து என்றவாறு.

வேந்தனது வினை — வேந்தற்கு உரிய வினை என்க. 'இடன் உடைத்து' என்றதனுன் அவர் தூதாங் காலம் அமைச்சராகிய வழியே நிகழும் என்று கொள்க. (௩௪)

௩௫. பொருள்வயிற் பிரிதலு மவர்வயி னுரித்தே.

இதுவும் அது.

இதன் பொருள் — பொருள்வயிற் பிரிவும் மேற் சொல்லப்பட்ட வணிகர் வேளாளரிடத்தில் உரியதாகும் என்றவாறு. (௩௫)

௩௬. உயர்ந்தோர் பொருள்வயி னொழுக்கத் தான.

இஃது அந்தணர் பொருட் பொருட்டுப் பிரியுந் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — உயர்ந்தோராகிய அந்தணர் பொருள்வயிற் பிரியுங் காலத்து ஒழுக்கத்தானே பிரிப என்றவாறு.

இதனாற் சொல்லியது வணிகர்க்கும் வேளாளர்க்கும் வாணிகம் முதலாயின பொருணிமித்தமாகிய வாறுபோல அந்தணர்க்கும் இவை பொருணிமித்தம் ஆகா என்பதூஉம் அவர்க்கு இயற்கை யொழுக்கமாகிய ஆசாரமும், செயற்கை யொழுக்கமாகிய கல்வியுமே பொருட்குக் காரணமாம் என்பதூஉம் கண்டவாறு. (௩௬)

௩௭. முந்நீர் வழக்க மகடூஉவோ டில்லை.

இதுவும் பொருள்வயிற் பிரிவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஈண்டு அதிகரிக்கப்பட்ட பிரிவு காலிற் பிரிவுங் கலத்திற் பிரிவும் என இருவகைப்படும்; அவற்றுள் கலத்திற் பிரிவு தலைமகளுடனில்லை என்றவாறு.

எனவே காலிற் பிரிவு தலைமகளை உடன் கொண்டு பிரியவும் பெறும் என்றவாறும்.

கலத்திற் பிரிவு தலைமகளை யொழியப் பிரிந்தமைக்குச் செய்யுள் —

'உலகுகிளர்ந் தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடை போழ
விரவு மெல்லையு மசைவின் றாகி
விரைசெல் லியற்கை வங்கூ ளாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீங்கான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வாள்வினை புரிந்த காதலர் நாள்பல

கழியா மையி னழிபட ரகல
வருவர் மன்னுற் றோழி தண்பணைப்
பொருபுனல் வைப்பி னூழ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றைப்
பெருவள மலர வல்லி நீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதளை மூதிலைக் கொடிநிறை தூங்க
வறனின் றலைக்கு மாணு வாடைக்
கடிமனை மாடத்துக் கங்குல் வீசத்
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாஅய்
நிரைவளை யூருந் தோளென
வுரையொடு செல்லு மன்பினர்ப் பெறினே' (அகம்-உருச)

எனவரும். காலிற்பிரிவு உதாரணம் வந்துழிக் காண்க. ()

**ங அ. எத்திணை மருங்கினு மகடூஉ மடன்மேற்**
**பொற்புடை நெறிமை யின்மை யான.**

இஃது, இத்துணையும் பாலைக்குரித்தாகிய பிரிவிலக்கணம் கூறினார். இனிக் கைக்கிளை பெருந்திணைக் குரிய இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — எல்லாக் குலத்தி னிடத்தினும் பெண்பால் மடலேறுதல் இல்லை, பொலிவுபெறு நெறிமை இல்லாமையான் என்றவாறு.

'மடன்மேல்' என்பது மடலேறுதல் என்னும் பொருள் குறித்தது. 'இல்லை' என்பது மேலைச் சூத்திரத்தினின்றுந் தந்துரைக்கப் பட்டது. 'பொற்புடை நெறிமை' என்பது பெண்பாற்கு இன்றியமையாத நாணம் முதலாயின. மகடூஉ மடலேறுதல் இல்லை எனவே ஆடூஉ மடலேறுதல் உண்டு என்பதுபெற்றாம். இது புணராவிரக்கமாகிய கைக்கிளைக்கும், * 'தேறுதலொழிந்த காமத்து மிகுதிறன்' ஆகிய பெருந்திணைக்கும் உரித்தாகியவாறு கண்டு கொள்க. (ங அ)

* அகத்திணை - ருக.

ந௯. தன்னு மவனு மவளுஞ் சுட்டி
மன்னு நிமித்த மொழிப்பொரு டெய்வம்
நன்மை தீமை யச்சஞ் சார்தலென்
றன்ன பிறவு மவற்றொடு தொகைஇ
முன்னிய கால மூன்றொடு விளக்கித்
தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலு
மாகிய கிளவியு மவ்வழி யுரிய.

இது மேற் கூறப்பட்ட இருவகைப் பிரிவினும் தமரைப் பிரிதலாகிய உடன்போக்கில் நிகழ்ந்த நற்றாய்மாட்டு உளதாய கிளவி உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — தன்னும் அவனும் அவளும் சுட்டி என்பது — தன்னையும் தலைமகனையும் தலைமகளையும் குறித்து என்றவாறு; மன்னு நிமித்தம் ஆவது — ஆட்சி பெற்ற நிமித்தம், அது பல்லி முதலாயினவாம்; மொழிப் பொருள் ஆவது — பிறர் தம்முட் கூறும் மொழிப் பொருளை நிமித்தமாகக் கோடல், அதனை நற்சொல் என்ப; தெய்வம் என்பது — உலகினுள் வாழும் இயக்கர் முதலாயினர் ஆவேசித்துக் கூறுஞ் சொல்; நன்மை தீமை அச்சம் என்பது — தனக்கும் அவர்க்கும் உளதாகிய நன்மையும், தீமையும், அச்சமும் என்றவாறு; சார்தல் என்பது — அவர் தன்னை வந்து சார்தல்; என்று என்பது — இடைச் சொல்; அன்ன பிறவும் என்பது — அத்தன்மைய பிறவும் என்றவாறு; அவற்றொடு தொகைஇ என்பது — மேற் சொல்லப்பட்ட நிமித்தம் முதலாயினவற்றொடு கூட்டி என்றவாறு; அவ்வழி ஆகிய கிளவியும் உரிய என்பது — அவ்விடத்தாகுங் கூற்றும் உரிய என்றவாறு.

எனவே, தலைமகள் உடன்போகியவழி நற்றாய், தன்னையும் அவனையும் அவளையுஞ் சுட்டி, நிலைபெற்ற நிமித்தம்

மொழிப் பொருள், தெய்வம் என்பனவற்றெடு தனக்கும் அவர்க்கும் உளதாகிய நன்மை, தீமை, அச்சம் சார்தல் என்பனவும் அத்தன்மைய பிறவும் கூட்டிக், குறித்த காலம் மூன்றும் ஒருங்கு தோற்றுவித்துத், தோழிமாட்டும் கண்டோர்மாட்டும் புலம்புதலும், அவ்வழி நிகழும் கூற்றும் உரிய என்றவாறு.

'போகியதிறத்து நற்றாய்' என்றதனை முன்னே கூட்டுக. 'அவற்றொடும்' என்பதனைத் தெய்வம் என்பதனொடுங் கூட்டுக. முன்னியகாலம் மூன்றுடன் விளக்குதலாவது: முன்பு இத்தன்மையளாயினள், இப்பொழுது இத்தன்மையளாகாநின்றாள், மேல் இன்னளாகுவள் என மூன்று காலமும் ஒருங்கு தோற்றுவித்துப் புலம்புதல். அவ் வழியாகிய கிளவியும் என மொழிமாற்றுக. அவற்றிற்குச் சில உதாரணங்கள்:

'தோழியர் சூழத் துறைமுன்றி லாடுங்கால்
வீழ்பவள் போலத் தளருங்கா — றாழாது
கல்லத ரத்தத்தைக் காதலன் பின்போதல்
வல்லவோ மாதர் நடை' (ஐந்தி. ஐம் - ௩எ)

இது தலைமகள் உடன்போயவழி நற்றாய் கவன்று உரைத்தது.

'மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
யன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையோ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே' (ஐங்குறு - ௩௧)

இது நற்றாய் உடன்போய தலைமகள்பொருட்டாகக் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது.

'வேறாக நின்னை வினவுவேன் றெய்வத்தாற்
கூறாயோ கூறுங் குணத்தினாய் — வேறாக
வென்மனைக் கேறக் கொணருமோ வெல்வளையைத்
தன்மனைக்கே யுய்க்குமோ தான்' (திணைமாலை - ௧0)

இது நற்றாய் தலைமகளின் உடன்போக் கெண்ணிப் படிமத்தாளை வினாஅயது. பிறவும் அன்ன. 'ஈன்றவள் புலம்பலும்' என்ற உம்மையால் செவிலி புலம்பலும் கொள்ளப்படும். உதாரணம்:

"பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனெ னென்றனள்
இனியறிந் தேனது துனியா குதலே
கழனெடி யாஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையுங் காந்தளு நாறி
யாம்பன் மலரினுந் தான்றண் ணியளே' (குறுந் - அ௪)

இஃது உடன்போக்கிய செவிலி கவன்று உரைத்தது.

'என்னு முன்னினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையோ
டழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே'(ஐங்குறு-௩எஉ)

இது தலைமகள் கொடுமை நினைந்து கூறியது.

'ஈன்றுபுறந் தந்த வெம்மு முள்ளாள்
வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி யிரட்டுந் தாழுடைக் கடிகை
நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிபடுத்
தொப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைப் புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிற ளாயின ளாயினு மணிந்தணிந்
தார்வ நெஞ்சமோ டாய்நல னளைஇத்தன்
மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா முழவிற் கோவற் கோமா
னெடுந்தேர்க் காரி கொடுங்கா முன்றுறைப்
பெண்ணையம் பேர்யாற்று நுண்ணறல் கடுக்கு
நெறியிருங் கதுப்பினென் பேதைக்
கறியாத் தேஎத் தாற்றிய துணையே' (அகம் - ௩௫)

இது செவிலி தெய்வம் பராஅயது. பிறவும் அன்ன.

## ௪0. ஏமப் பேரூர்ச் சேரியுஞ் சுரத்துந் தாமே செல்லுந் தாயரு முளரே.

இது தலைமகள் உடன்போகியவழிச் செவிலிக்கு உரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஏமம் பொருந்திய பெரிய ஊரகத்துச் சேரியின் கண்ணும், ஊரினின்றும் நீங்கிய சுரத்தின் கண்ணும், தாமே செல்லுந் தாயரும் உளர் என்றவாறு.

'தாமே செல்லுந் தாயர்' என்பதனால் செவிலி என்பது பெற்றாம். 'தாயரும்' என்றதனால் கைத்தாயர் பலர் என்று கொள்ளப்படும். அவ்வழிச் சேரியோரை வினாதலும், சுரத்திற் கண்டோரை வினாதலும் உளவாம். சேரியிற் பிரிதலும் பாலை ஆகுமோ எனின், அது வருகின்ற சூத்திரத்தினால் விளங்கும். சேரியோரை வினாதற்குச் செய்யுள் —

'இதுவென் பாவைக் கினியநன் பாவை
யிதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி
யிதுவென் பூவைக் கினியசொற் பூவையென்
றலம்வரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்டொறுங் காண்டொறுங் கலங்கி
நீங்கின ளோவென் பூங்க ணோளே' (ஐங்குறு - ௩௭௫)

எனவரும்.

'எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ
லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
யென்மக ளொருத்தியு பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணீரோ பெரும' (கலி. பாலை - ௮)

இது சுரத்திடை வினாஅயது.

'செய்வினை பொலிந்த செறிகழ லொன்றாண்
மையணற் காளையொடு பைய வியலிப்

பாலை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றி ரைய
வொன்றின வோவவ ளஞ்சிலம் படியே'(ஐங்குறு-நடஅக)

என வருவதும் அது.

'காலே பரிதப் பினவென் கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
யகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே' (குறுந் - சச)

என வருவது சுரத்திடை விஞஅயது நிகழ்ந்த பின்னர்க் கூறியது. (சO)

சக. அயலோ ராயினு மகற்சி மேற்றே.

இதுவும் பாலைக்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — சேரியினும் சுரத்தினும் பிரிதலன்றித் தமது மனையயற்கட் பிரிந்தாராயினும் பிரிவின்கண்ணதே என்றவாறு.

எனவே ஒருரகத்து மனையயற்கண்ணும் பரத்தையிற் பிரிவும் பாலையாம் என்பதூஉம் உய்த்துணர்ந்து கொள்ளப்படும். (சக)

சஉ. தலைவரு விழும நிலையெடுத் துரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்
வாய்மையும் போய்ம்மையுங் கண்டோற் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைபெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித் தன்னெஞ்சு கலுழ்ந்தோளை
யழிந்தது களையென மொழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் றிறத்தோ
டென்றிவை யெல்லா மியல்புற நாடி
னொன்றித் தோன்றுந் தோழி மேன.

இது பிரிவின்கண் தோழிக்குக் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — தலைவரு விழுமநிலை யெடுத்துரைத்தல் முதலாகச் சொல்லப்பட்டன தோழிமாட்டுப் பொருந்தித் தோன்றும் என்றவாறு.

தலைவரும் விழுமநிலை எடுத்துரைத்தலாவது — பின்பு வரும் நோய் நிலையை எடுத்துக் கூறுதல் என்றவாறு.

உதாரணம் :

'பாஅ லஞ்செவிப் பணைத்தாண் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர்ப் பட்ட வாறுமயங் கருஞ்சுர
மிறந்துநீர் செய்யும் பொருளினும் யாநுமக்குச்
சிறந்தன மாத லறிந்தனி ராயி
னீளிரு முந்நீர் வளிகலன் வௌவலி
னுள்வினைக் கழிந்தோர் போற லல்லதைக்
கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவ
நாளுங் கோண்மீன் றகைத்தலுந் தகைமே;
கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ;
ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தொடு பைதல்கொண் டமைவாளோ;
ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு
ணீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ;
எனவாங்கு;
பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய் நீசெல்வ
தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே.
(கலி. பாலை - ௪)

எனவரும். இதனுள் 'யாம் நுமக்குச் சிறந்தனமாதலறிந்தனிராயின்' என்றமையாலும், 'பொய்ந்நல்கல் புரிந்தனை' என்றமையாலும் வரைவதன் முன்பென்று கொள்ளப்படும். இவள் இறந்துபடும் என்றமையால் உடன்கொண்டு போவது குறிப்பு.

போக்கற் கண்ணும் என்பது — உடன்கொண்டு பெயர் என்று கூறுதற் கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றா
லென்னீ ரறியாதீர் போல விவைகூற
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு.' (கலி - பாலை - ௩)

எனவரும்.

விடுத்தற் கண்ணும் என்பது — தலைமகள் உடன் போக்கு ஒருப்பட்டமை தலைமகற்குக் கூறி அவளை விடுத்தற்கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'உன்னங் கொள்கையோ டுளங்கரந் துறையு
மன்னை சொல்லு முய்க வென்னதூஉ
மீரஞ் சேரா வியல்பில் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையு மொழிக
நாடுக ணகற்றிய வுதிய னஞ்சொற்
பாடிச் சென்ற பரிசிலர் போல
வுவவினி வாழி தோழி யவரே
பொம்ம லோதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரா லின்றே பரந்தெழு
மலைதொறு மால்கழை மிசைந்த கால்வாய்
கூரேரி மீன்கொள் பரதவர் கொடுந்திமி
னளிசுடர் வான்றோய் புணரிமிசைக் கண்டாங்கு
மேவரத் தோன்றும் யாவுயர் நனந்தலை
யுயவல் யானை வெரிநுச்சென் றன்ன

கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறி
காடு மீக்கூறுங் கோடேந் தொருத்த
லாறுகடி கொள்ளு மருஞ்சுரம் பணைத்தோ
ளுறைங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிரையிதழ் முண்கண் மகளிர்க்
கரிய வாலென வழுங்கின செலவே (அகம் - கூச)

எனவரும். இஃது உடன்போக்கு நயப்பித்தது.

'வேலும் விளங்கின வினையரு மியன்றனர்
தாருந் ததையின தழையுந் தொடுத்தன
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇய வுலவை யிலைநீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
றேம்படப் பொதுளின பொழிலே கானமு
நனிநன் ருகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலை
போதுவந் தன்ருற் றூதே நீயுங்
கலங்கா மனத்தை யாகி யென்சொ
னயந்தனை கேண்மோ நெஞ்ச மாக்குவை
தெற்றி யுலரினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினு
நின்னினு மடவ ணனிநீ நயந்த
வன்னை யல்ல ருங்கினின் னையர்
புலிமருள் செம்ம லேறுக்கி
வலிமா வின்னுந் தோய்கநின் முலையே.' (அகம் - உருக)

இது விடுத்தவழிக் கூறியது.

நீக்கலின் வந்த தம்முறு விழுமமும் என்பது — தமரை நீக்குதலால் தமக்குற்ற நோயின் கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'விளம்பழங் கமழும் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளின்முதன் முழங்கும்

வைகுபுலர் விடியன் மெய்கரந்து தன்கா
லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு வைஇய செல்வோ
ளிவைகாண் டோறு நோவர் மாதோ
வளியரோ வளியரென் னுயத் தோரென
நும்மொடு வரவுதா னயரவுந்
தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே.' (நற்றி. கஉ)

எனவரும். இஃது உடன்போக்குத் தவிர்தற்பொருட்டுக் கூறியது. இன்னும் 'நீங்கலின் வந்த தம்முறு விழுமம்' என்றதனால் தலைமகட்குக் கூறினவுங் கொள்க.

உதாரணம் :

'நாளு நாளு மாள்வினை யழுங்க
வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெனா
வொண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே.' (சிற்றட்டகம்-பாலை)

எனவரும்.

வாய்மையும் பொய்ம்மையும் கண்டோற் சுட்டித் தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும் என்பது — மெய்ம்மையும் பொய்ம்மையும் காணப்பட்ட அவனைச் சுட்டித் தாய்நிலை நோக்கி மீட்டுக் கொள்ளுதற் கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி
யீர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்த
லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னு
மருளில் சொல்லு நீசொல் லினையே
நன்னர் நறுநுத லயந்தெமை நீவி
நின்னிற் பிரியலே னஞ்சலோம் பென்னும்
நன்னர் மொழியு நீமொழிந் தனையே
அவற்றுள்,
யாவோ வாயின மாஅன் மகனே

கிழவ ரின்னோ ரென்னது பொருடான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையு
மன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்
றிமைப்புவரை வாழாண் மடவோ
ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே.'
(கலி. பாலை-௨0)

எனவரும். இது தலைமகனைச் சுட்டிக் கூறியது. தாய் நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொண்டதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

நோய் மிகப் பெருகித் தன் நெஞ்சு கலுழ்ந்தோளை அழிந்தது களையென மொழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு என்றிவை எல்லாம் இயல்பு உற நாடின் ஒன்றித்தோன்றும் தோழிமேன என்றது— தலைமகன் பிரிதலால் வந்துற்ற நோய் மிகவும் பெருகித் தன்நெஞ்சு கலங்கியோளை அழிந்தது * களைதல் வேண்டுமெனத் தலைமகன் சொன்ன மாற்றத்தைக் கூறி வன்புறையின்பொருட்டு நெருங்கி வந்ததன் † திறத்தோடு இத்தன்மையவெல்லாம் இயல்பு உற ஆராயின் தலைமகளோடு பொருந்தித் தோன்றுந் தோழி மேலன என்றவாறு.

'ஒன்றித் தோன்றுந் தோழி' என்றதனுல் தோழிமார் பலருள்ளும் இன்றியமையாதாள் என்று கொள்க.

'தோழி தானே செவிலி மகளே' (களவி - ௩௫)

என்றதனுனும் அவள் செவிலிமகள் என்று கொள்ளப்படும்.

மொழிந்தது கூறி வன்புறை நெருங்குதலாவது — தலைமகன் மொழிந்தது கூறி வற்புறுத்தலாம்.

'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்

* 'காத்தல்' எனவும் பிரதிபேதம்.
† 'திறத்துக்கொண்டு' எனவும் பிரதிபேதம்.

பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி;

என்று,

அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுட்
டுடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே;

எனவும்,

இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்
றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே;

எனவும்,

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்
றுன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளின்னிழ லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்த-
[னரே

எனவும் அவன் மொழிந்தது கூறி,

எனவாங்கு,
இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே' (கலி. பாலை - ௧௦)

என வற்புறுத்தியவாறு கண்டுகொள்க.

'ஏன்றிவையெல்லா மியல்புற நாடின்' என்பதனால் 'பருவம் வந்தது', 'பருவம் அன்று' என வருவன கொள்க.

'வல்வருவர் காணாய் வயங்கி முருக்கெல்லாஞ்
செல்வச் சிறாஅர்க்குப்பொற் கொல்லர்போ — னல்ல
பவளக் கொழுந்தின்மேற் பொற்றாலி பாஅயத்
திகழக்கான் றிட்டன தேர்ந்து' (திணைமாலை - ௬௬)

இது பருவம் வந்தது என்றது.

'மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணை ரூழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே' (குறுந் - ௬௬)

இது பருவம் அன்று என்றது.

இன்னும் 'என்றிவை யெல்லாம்' என்றதனால் பிரியுங் காலத்துத் தலைமகட்கு உணர்த்துகின்றேன் எனத் தலைமகற்கு உரைத்தலும், தலைமகட்கு அவர் பிரியார் எனக் கூறுதலும் கொள்க.

'மூளவுமா வல்சி யெயினர் தங்கை
யிளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வென்வேல் விடலை விரையா தீமே' (ஐங்குறு - ௩௬௪)

இது விலக்கிற்று.

'விளங்கிழாஅய் செல்வரோ வல்ல ரழற்பட்
டசைந்த பிடியை யெழிற்களிறு
கற்றடைச் செற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண்
டுச்சி யொழுக்குஞ் சுரம்'

இது தலைமகட்குக் கூறியது. (௪௨)

௪௩. பொழுது மாறு முட்குவரத் தோன்றி
வழுவி னாகிய குற்றங் காட்டலும்
மூரது சார்புஞ் செல்லுந் தேயமு
மார்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கிற் * புணர்ந்த நெஞ்சமோ
டழிந்தெதிர் கூறி விடுப்பினு மாங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினுஞ்
சேய்நிலைக் ககன்றோர் சேலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

* 'புணர்ந்தறி நெஞ்சமொடு' எனவும் பிரதிபேதம்.

இது கண்டோர் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவின் ஆகிய குற்றம் காட்டலும் ஊரது சார் பும் செல்லும் தேயமும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும் என்பது — காலமும் நெறியும் அச்சம் வரு மாறு தோன்றி * வழுவுதலினாகிய குற்றம் காட்டலும் ஊரது அணிமையும் செல்லுந் தேயத்தின் சேய்மையும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய பக்கத்தினும் என்றவாறு.

உதாரணம் :

'எம்மூ ரல்ல தூர்நணித் தில்லை
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப
விளையண் மெல்லியண் மடந்தை
யரிய சேய பெருங்கான் யாறே'

எனவரும்.

புணர்ந்தோர் பாங்கில் புணர்ந்த நெஞ்சமோடு அழிந்து எதிர்கூறி விடுப்பினும் என்பது — புணர்ந்து செல்கினறோர் பக்கத்து விரும்பின நெஞ்சத்தொடு மனன் அழிந்து எதிர்மொழி கூறி விடுத்தற்கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்
தொலிவ லீந்தி னுலவை யங்காட்
டாறுசென் மாக்கள் சென்னி யெறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மரனோக்கு மிண்டிவ ரீங்கைய சுரனே
வையெயிற் றையண் மடந்தை முன்னுற்
றெல்லிடை நீங்கு மிளையோ னுள்ளங்

* 'வழுவு முதலாகிய' எனவும் பிரதிபேதம்.

காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கு முருமினுங் கொடிதே.' (நற்றி - உ)

எனவரும்.

ஆங்கு அத் தாய் நிலைகண்டு தடுப்பினும் விடுப்பினும் என்பது — ஆண்டுப் பின்சென்ற அச் செவிலித்தாயது நிலைமையைக் கண்டு போகாமல் தடுத்தற்கண்ணும் போக விடுத்தற்கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'அறம்புரி யருமறை நவின்ற நாவிற்
றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
* கண்டனெ மம்ம சுரத்திடை யவளை
யின்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே.'
(ஐங்குறு - ௩அஎ)

எனவரும். இது செவிலி வினாஅயவழிக் கூறியது.

'பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி
சிலம்புகெழு சீறடி சிவப்ப
விலங்குவேற் காளையொ டிறந்தனள் சுரனே.'

இது தடுத்தற்கண் வந்தது.

'நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல் விடலை முன்னிய சுரனே.' (ஐங்குறு-௩அஅ)

இது விடுத்தற்கண் வந்தது.

சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும் என்பது — சேய்மைக்கண் அகன்றோர் செல்லுதற்கண்ணும் வரவின்கண்ணும் என்றவாறு.

---

* 'கண்டே மோரமையஞ் சுரத்' என்வும் பாடம்.

உதாரணம்:

'வில்லோன் காலன கழலே தொடியோண்
மெல்லடி மேலன சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே யாரியர்
கயிறுடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயி லழுவ முன்னி யோரே.' (குறுந் - ௭)

எனவரும்.

கண்டோர் மொழிதல் கண்டது என்ப என்பது — இவ்விவ் விடங்களில் கண்டோர் சொல்லுதல் வழக்கிற் காணப்பட்ட தென்ப என்றவாறு. (௪௩)

௪௪. ஒன்றுத் தமரினும் பருவத்துஞ் சுரத்து
மொன்றிய மொழியோடு வலிப்பினும் விடுப்பினு
மிடைச்சுர மருங்கி னவட்ட மெய்திக்
கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞ ரெய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட
வப்பாற் பட்ட வொருதிறத் தானு
நாளது சின்மையு மிளமைய தருமையுந்
தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியு
மின்மைய திளிவு முடைமைய துயர்ச்சியு
மன்பின தகலமு மகற்சிய தருமையு
மொன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும்
வாயினுங் கையினும் வகுத்த பக்கமோ
டூதியங் கருதிய வொருதிறத் தானும்
புகழு மானமு மெடுத்துவற் புறுத்தலுந்
தூதிடை யிட்ட வகையி னானு
மாகித் தோன்றும் பாங்கோர் பாங்கினு
மூன்றன் பகுதியு மண்டிலத் தருமையுந்

தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலு முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்
காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்
பரத்தையி னகற்சியின் பிரிந்தோட் குறுகி
யிரத்தலுந் தெளித்தலு மெனவிரு வகையோ
டுரைத்திற நாட்டங் கிழவோன் மேன.

இது பிரிவின்கண் தலைமகற்குக் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும் ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும் என்பது — வரைவு உடன்படாத தமர்கண்ணும் பருவத்தின் கண்ணும் சுரத்தின்கண்ணும் பொருந்திய சொல்லொடு தலைமகளை உடன்கொண்டு போகத் துணியினும் விடுத்துப் போகினும் 'உரைத்திற நாட்டங் கிழவோன் மேன' என்றவாறு.

உரைத்திற நாட்டம் உளவாம் கிழவோற்கு என்றல் ஏனைய பகுதிக்கும் ஒட்டுக. வலித்தற்குச் செய்யுள் —

'ஆறுசெல் வருத்தஞ் சீறடி சிவப்பவுஞ்
சினைநீங்கு தளிரின் வண்ணம் வாடவுந்
தான்வர றுணிந்த விவளினு மிவளுடன்
வேய்பயி லழுவ முவக்கும்
பேதை நெஞ்சம் பெருந்தக வுடைத்தே.'

எனவும்,

'வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குளவி மொய்த்த வழுகற் சின்னீர்
வளையுடைக் கைய ளெம்மோ டுணீஇய
வருகதில் லம்ம தானே
யளியளோ வளியளென் னெஞ்சமர்ந் தோளே.'

(குறுந் - ருசு)

எனவும் வரும்.

அவ்வழி, இடைச்சுரத்திற் கூறியதற்குச் செய்யுள் —

'அழிவில முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
நலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்ப லூரயாஞ் செல்லு மாறே.' (நற்றி - ௯)

எனவரும். இனி விடுத்தற்குச் செய்யுள் —

'இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு*
நாட்டயிர் கடைகுரன் கேட்டொறும் வெரூஉ
மாநிலைப் பள்ளி யல்க நம்மொடு
மானுண் கண்ணியும் வருமெனின்
வாரா ராயரோ பெருங்க லாறே.'

எனவரும். இது உடன்கொண்டு பெயர்தல் வேண்டும் என்ற தோழிக்குக் காட்டது கடுமை கூறி விடுத்தது.

'கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரிற்
றளிபொழி தளிரன்ன வெழின்மேனித் தகைவாட
முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த
வளியுறி னவ்வெழில் வாடுவை யல்லவோ.'
(கலி. பாலை - ௬௨)

என்றது தலைவிக்குக் காட்டது கடுமைகூறி விடுத்தது.

இடைச்சுரம் மருங்கின் அவள் தமர் எய்திக் கடைக்கொண்டு பெயர்தலின் கலங்கு அஞர் எய்திக் கற்பொடு புணர்ந்த கெளவை உளப்பட அப்பாற்பட்ட ஒருதிறத் தானும் என்பது — தலைமகள் செல்கின்ற இடைச் சுரத்

* 'செந்நாய்' எனவும் பாடம்.

திடைத் தலைமகள் தமர் எய்தி மீட்டுக்கொண்டு பெயர்தல் மரபாதலின், அங்ஙனம் பெயர்வர் எனக் கலங்கி வருத்த முற்றுக் கற்பொடு புணர்ந்த அலர் உளப்பட அப் பகுதிப்பட்ட உடன்போக்கின்கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

அவ்வழி வருவர் எனக் கூறலும், வந்தவழிக் கூறலும் உளவாம்.

‘வினையமை பாவையி னியலி நுந்தை
மனைவரை யிறந்து வந்தனை யாயிற்
றலைநாட் கெதிரிய தண்பெய லெழிலி
யணிமிகு கானத் தகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டு
நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராஅரை வேங்கை
மணலிடு மருங்கி னிரும்புறம் பொருந்தி
யமர்வரி னஞ்சேன் பெயர்க்குவெ
னுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே.’

(நற்றி - நஉஉ.)

இது வருவர் என ஐயுற்றுக் கூறியது.

‘கற்பொடு புணர்ந்த கௌவை’க்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

நாளது சின்மையும், இளமையது அருமையும், தாளாண் பக்கமும், தகுதியது அமைதியும், இன்மையது இளிவும், உடைமையது உயர்ச்சியும், அன்பினது அகலமும், அகற்சியது அருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும் என்பது — நாளது சின்மை முதலாகச் சொல்லப்பட்ட எட்டனையும் பொருந்தாத, பொருட்கண் ஊக்கிய பக்கத்தினும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

‘ஒன்றா’ என்னும் பெயரெச்சம் ‘பால்’ என்னும் பெயர்கொண்டு முடிந்தது. அது ‘பொருள்வயினூக்கிய பால்’ என அடையடுத்து நின்றது.

நாளது, சின்மையை ஒன்றுமை யாவது — யாக்கை நிலையாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை;

இளமையது அருமையை ஒன்றுமை யாவது — பெறுதற்கரிய இளமை நிலையாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை;

தாளாண் பக்கத்தை ஒன்றுமை யாவது — முயற்சியான் வரும் வருத்தத்தை உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை;

தகுதியது அமைதியை ஒன்றுமை யாவது — பொருண்மேற் காதல் உணர்ந்தோர்க்குத் தகாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை;

இன்மையது இளிவை ஒன்றுமை யாவது — இன்மையான் வரும் இளிவரவினைப் பொருந்தாமை;

உடைமையது உயர்ச்சியை ஒன்றுமை யாவது — பொருள் உடையார்க்கு அமைவு வேண்டுமன்றே அவ்வமை வினைப் பொருந்தாமை, அஃதாவது மேன்மேலும் ஆசை செலுத்துதல்;

அன்பினது அகலத்தை ஒன்றுமை யாவது — சிறந்தார்மாட்டுச் செல்லும் அன்பினைப் பொருந்தாமை;

அகற்சியது அருமை ஒன்றுமை யாவது — பிரிதலருமையைப் பொருந்தாமை;

பொருள் தேடுவார் இத்தன்மையராதல் வேண்டும் என ஒருவாற்றான் அதற்கு இலக்கணங் கூறியவாறு.

வாயினும் கையினும் வகுத்த பக்கமோடு ஊதியங் கருதிய ஒருதிறத்தானும் என்பது — வாயான் வகுத்த பக்கமோடும் கையான் வகுத்த பக்கமோடும் பயன் கருதிய ஒருகூற்றானும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

வாயான் வகுத்த பக்கமாதல், ஓதுதல். கையான் வகுத்த பக்கமாதல், படைக்கலம் பயிறலும், சிற்பங்

கற்றலும். ஊதியங் கருதிய வொருதிற ஞானும் — மேற் சொல்லப்பட்ட பொருள்வயிற் பிரிதலன்றி அறத்திறங் காரணமாகப் பிரியும் பிரிவு; இது, மறுமைக்கண் பயன் தருதலின் 'ஊதியம்' ஆயிற்று.

'அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.' (குறள். அறன்வலி - உ.)

என்பதனானும் அறிக.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் என்பது — பிரிந்ததனால் வரும் புகழும் பிரியாமையால் வரும் குற்றமும் குறித்துத் தலைமகளை யான் வருந்துணையும் ஆற்றி யிருத்தல் வேண்டும் எனக் கூறுதற்கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

'பொருள்வயி னாக்கிய பாலினும்', 'ஊதியங் கருதிய வொருதிறத்தானும்' வற்புறுத்தல் எனக் கூட்டுக.

உதாரணம் :

'அறனு மீகையு மன்புங் கிளையும்
புகழு மின்புந் தருதலிற் புறம்பெயர்ந்து
தருவது துணிந்தமை பெரிதே
விரிபூங் கோதை விளங்கிழை பொருளே.'

எனவரும்.

தூது இடை இட்ட வகையினானும் என்பது — இரு பெரு வேந்தர் இகலியவழிச் சந்துசெய்தற்குத் தூதாகிச் செல்லும் வகையின்கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் என்பது — தனக்குப் பாங்காகித் தோன்றுவார் பக்கத்துப் பிரியும் வழியும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

அதுவும் வேந்தற்கு உற்றுழிப் பிரியும் பிரிவு.

மூன்றன் பகுதி யாவன — நால்வகை வலியினும், தன் வலியும் துணைவலியும் வினைவலியும் என்பன. அவை பகைவர்மாட்டு உள்ளன.

மண்டிலத்து அருமையாவது — பகைவர் மண்டிலங் கொண்ட அருமை என்றவாறு.

தோன்றல் சான்ற என்பது — இவை மிகுதல் சான்ற என்றவாறு.

மாற்றோர் மேன்மை யாவது — மாற்றோரது உயர்ச்சி யானும் என்றவாறு.

ஆன் உருபு எஞ்சிநின்றது. மூன்றன் பகுதியானும் மண்டிலத்தருமையானும் தோன்றல் சான்ற மாற்றோர் எனக் கூட்டுக.

பாசறைப் புலம்பல் என்பது — பாசறைக்கண் தலைமகன் தனிமை யுரைத்தல் என்றவாறு.

தூதிடையிட்ட வகையினானும், வேந்தற்கு உற்றுழி யினானும், மாற்றோர் மேன்மையினானும் பிரிந்த தலைமகன் பாசறைக்கட் புலம்பல் எனக் கூட்டுக. அஃதாவது தூதி னும், வேந்தற்கு உற்றுழியினும், பகைதணி வினையினும் அவற்குப் பாசறைக்கட் புலம்பல் உளதாகும் என்க.

உதாரணம்:

'வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்தி னன்ன
தளைபிணி யவிழாச் சுரிமுகப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலருந்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குன் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்
தன்னூ ரோளே நன்னுதல் யாமே

கடிமதிற் கதவம் பாய்தலிற் ெறாடிபிளந்து
நுதிமுக மழுங்கிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா வொண்மணி
கழிபிணிக் கறைத்தோற் பொழிகணை யுதைப்பத்
தழங்குகுரன் முரசமொடு மயங்கும் யாமத்துக்
கழித்துறைச் செறியா வாளுடை யெறுழ்த்தோ
ளிரவுத்துயின் மடிந்த தானை
யுரவுச்சின வேந்தன் பாசறை யேமே.' (அகம் - உச.)

எனவரும். இது வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் கூற்று.

'வைகு புலர் விடியல்' (அகம் - சக)

என்றது பகையிற் பிரியும் தலைமகன் கூற்று. பிறவும் அன்ன. இவ்வாறு வருவன குறித்தபருவம் பிழைத்துழி என்று கொள்க.

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும் என்றது — வினைமுடிந்த காலத்துப் பாகனொடு விரும்பப்பட்ட வினைத்திறத்தின் வகையின் கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

அக்கூற்று பாசறைக்கட் கூறலும், மீண்டு இடைச் சுரத்துக் கூறலும் என இருவகைப்படும். இன்னும் 'வகை' என்றதனான் நெஞ்சிற்குக் கூறுவனவுங் கொள்க.

உதாரணம் :

'வந்துவினை முடித்த வேந்தனும் பகைவருந்
தந்திறை கொடுத்துத் தமரா யினரே
முரண்செறிந் திருந்த தானை யிரண்டு
மொன்றென வறைந்தன பறையே நின்றோர்
முன்னியங் கூதிர்ப் பின்னிலை யீயா
தூர்க பாக வொருவினை கழிய
நன்ன ரேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி
பொன்னணி வல்விற் புன்றுறை யென்றாங்

கன்றுவர் சூழீஇய வளப்பருங் கடமூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனு னாகித் திண்டேர்க்
கணைய னகப்படக் கழுமலந் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி
யழும்பி லன்ன வறுஅ யாணர்ப்
பழம்பன் னெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி கடிகய மண்டிய பசுமிளைத்
தண்குட வாயி லன்னோள்
பண்புடை யாகத் தின்றுயில் பெறவே.' (அகம் - ௪௪.)

எனவும்,

'கேள்கே ளேன்றவுங் கிளைஞ ராரவுங்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவு
மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்
தாரங் கண்ணி யடுபோர்ச் சோழ
ரறங்கெழு நல்லவை யுறந்தை யன்ன
பெறலரு நன்கல மெய்திய நாளுஞ்
செயலருஞ் செய்வினை முற்றின மாயி
னரண்பல கடந்த முரண் கொடானை
வாடா வேம்பின் வழுதி கூட
னாளங் காடி நாறு நறுநுத
னீளிருங் கூந்தன் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்றோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுத
லயந்திகழ் பிழிதரும் வாய்புகு கடாஅத்து
மீளி முன்பொடு நில்னெறியாக் குறுகி
யாட்கோட் பிழைத்த வஞ்சுவரு தடக்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீ ருயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும் பலவே.' (அகம் - ௯௩.)

எனவும் வருவன நெஞ்சிற்குக் கூறியன.

'கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் பெஃகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
வப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்புட ரன்ன செங்குழை யகந்தோ
றிழுதி னன்ன தீம்புழற் றுய்வா
யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவி
னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளி ரோச்சிய
தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபின் னொழியப் போகி யுரந்துரந்து
ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவி
னெம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா
ணோங்குயர் நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
லந்தீங் கிளவிக் குறுமகண்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே.'
(அகம் - க.)

இஃது இடைச்சுரத்துச் சொல்லியது.

காவல் பாங்கின் ஆங்கு ஓர் பக்கமும் என்பது — காவற் பக்கத்தின்கண் ஒரு கூற்றினும் என்றவாறு.

'ஆங்கு' என்பது இடங்குறித்து நின்றது;

'நின்னாங்கு வரூஉ மென் னெஞ்சினை.'(கலி. பாலை உஉ.)

என்றாற்போலக் கொள்க.

இது கலியுள் யானை காணவும், நாடு காணவும், புனலாடவும், கடவுளரை வழிபடவும் பிரியும் பிரிவு. ஒருபக்கம் நாட்டெல்லையிலிருந்து பகைவரைக் காக்க வேண்டிப் பிரிவது பகைவயிற் பிரிவின் அடங்குதலின் இத் தன்மைக்கட் பிரியும் பிரிவு என்று வேறு ஓதப்பட்டது.

பரத்தையின் அகற்சியின் என்பது — பரத்தையரிற் பிரியும் பிரிவின்கண்ணும் என்றவாறு.

உம்மை எஞ்சி நின்றது.

பிரிந்தோள் குறுகி இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு என்பது — பிரியப்பட்ட தலைமகளைக் குறுகி இரத்தலும் தெளித்தலும் ஆகிய இரண்டுவகை யோடே கூட என்றவாறு.

'காவற் பாங்கினுங்கோர் பாங்கினும்' 'பரத்தையின் அகற்சியினும்' பிரியப்பட்டார் எனக் கூட்டுக. அஃதேல் பரத்தையின் அகற்சி ஊடலாகாதோ எனின், ஊடலின் மிக்க நிலையே ஈண்டுக் கூறுகின்றது எனக்கொள்க.

கடவுள்மாட்டுப் பிரிந்துவந்த தலைமகனைத் தலைமகள் புணர்ச்சி மறுத்தற்குச் செய்யுள் —

மருதக் கலியுள் கடவுட் பாட்டினுள்,

'வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப
பண்டின்னை யல்லைமன் னீங்கெல்லி வந்தீயக்
கண்ட தெவன்மற் றுரை;
நன்றும்,
தடைஇய மென்றோளாய் கேட்டீவா யாயி
னுடனுறை வாழ்க்கைக் குதவி யுறையுங்
கடவுளர் கட்டங்கி னேன்;
சோலை,
மலர்வேய்ந்த மான்பிணை யன்னார் பலர்நீ
கடவுண்மை கொண்டொழுகு வார்.' (கலி. மரு - உஅ.)

எனவும்,

'சிறுவரைத் தங்கின் வெகுள்வர் செறுத்தக்காய்
தேறினென் சென்றீநீ செல்லா விடுவாயே
னற்று ரகலத்துக் கொருசார் மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
முட்டுப்பா டாகலு முண்டு.' (கலி. மரு - உஅ.)

எனவும் புணர்ச்சிக்கு உடன்படாது கூறுதலானும்;

குறும்பூழ்ப் பாட்டினுள்,

'விடலைநீ நீத்தலி னோய்பெரி தேய்க்கு
நடலைப்பட் டெல்லாநின் பூழ்.' (கலி. மரு - ௩௦.)

என்றவழி மருதநிலத்தின் தலைமகனை விடலை என்றமை யானும்; இதனுள்,

'பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி.'
(கலி. மரு - ௩௦.)

என இரந்தமையானுங் கண்டு கொள்க.

'ஒரூஉக்,
கொடியிய னல்லார் குரானற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடீஇய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்று தவர்;
கடியர்தமக் கியார்சொல்லத் தக்கார் மற்று;
வினைக்கெட்டு,
வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து;
ஆயிழாய்,
நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு;
இஃதொத்தன்,
புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயிற் றுற்றனவு
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு நல்லார்
சிறுபு சீறச் சேர்ந்தநின் மார்புந்
தவறுதல் சாலவோ கூறு;
அதுதக்கது,

வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு ;
இனித் தேற்றேம் யாம்,
தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு.' (கலி. மரு - உ௩.)

இதனுள் இரத்தலும் தெளித்தலும் வந்தவாறு கண்டு கொள்க.

கலித்தொகையுள் கடவுட் பாட்டினுள் உரிப்பொருண்மைபற்றி வரும் பாட்டு மருதநிலத்துத் தலைமகன் பெயர் கூறுது பிறபெயர்படக் கோத்தமையானும் ஊடற்பொருண்மையின் வேறுபாடுண்மை அறிக.

உரைத்திற நாட்டம் கிழவோன் மேன என்பது — இவ்விவ் விடங்கள் பற்றி உரையாடுங் குறிப்பு தலைமகன் மேலன என்றவாறு. (௪௪)

சரு. எஞ்சி யோர்க்கு மெஞ்சுத லிலவே.

இது, பிரிவின்கண் கூறுதலுரியார் பலருள்ளும் நற்ருயும் செவிலியும் கண்டோரும் தோழியும் தலைமகனும் கூறுங் கூற்றுக் கூறினர்; இனி அவரை யொழிந்த தலைமகட்கும் பாங்கற்கும் பார்ப்பார்க்கும் பாணர்க்கும் கூத்தர்க்கும் உழையோர்க்கும் கூற்று நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — முன்னர்க் கூறுது எஞ்சி நின்றோர்க்கும் கூற்று ஒழிதல் இல்லை என்றவாறு.

பாங்கர் முதலாயினரை இச் சூத்திரத்தாற் கூறினர் தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல்வேண்டும்; இவரொடு ஒரு நிகரன்மையின் எனின் ஒக்கும். தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழைமையாற் பெயர்த்து

எழுதுவார் விழ எழுதினார்போலும் என்க. எனினும், ஆசிரியன் இச் சூத்திரத்தானும் அப்பொருள் கொள்ள வைத்தமையின் தலைமகள் கூற்றாய பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக்கண்டு அவள் கூறுதலும், பிரிவுணர்ந்து தலைமகள் கூறுதலும், பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறுதலும், உடன் போவல் எனக் கூறுதலும், இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டனவும், தமர் வந்துற்றவழிக் கூறுதலும், மீளலுற்ற தலைமகள் ஆயத்தார்க்குக் கூறிவிட்டனவும், பிரிவாற்றாது கூறுதலும், பிரிந்தார் என்றவழிக் கூறுதலும், ஆற்றுவல் என்பது படக் கூறுதலும், தெய்வம் பராவலும், பருவங்கண்டு கூறுதலும், வன்புறை யெதிரழிந்து கூறுதலும் இவை போல்வனவும் எல்லாம் கூறப்படும்.

உதாரணம் :

'நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெஞ்
செய்பொருண் முற்று மளவென்றா ராயிழாய்,
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலமாயிற்
றொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னெய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று கொல்லென் னுயிர்.' (கலி. பாலை - உ௫.)

எனவரும்.

இது பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக் கண்டு தலைமகள் கூறியது.

'செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி;
'செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
யன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றும லாண்டோ
ரவலம் படுதலு முண்டு.' (கலி. பாலை - கஅ.)

இது பிரிவுணர்ந்த தலைமகள் தலைமகனுடன் கூறியது.

இனி, பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறியதற்குச் செய்யுள் —

'அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயி
னுரவோ ருரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே.' (குறுந் - உ0.)

எனவரும்.

செல்லாமை யுண்டே லெமக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை'. (திருக்குற. பிரிவாற் - க.)

என்பதும் அது.

உடன்போக்கு ஒருப்பட்டதற்குச் செய்யுள் —

'சிலரும் பலருங் கடைக்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டி ரம்ப றூற்றச்
சிறுகோல் வலந்தன ளன்னை யலைப்ப'
வலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்

கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வருஉ மியறோர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
யலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே.' (நற்றி - கசூக.)

எனவரும்.

'சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்
நும்மோன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்
யாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின
வாரிடை யிறந்தன ளென்மி
னேரிறை முன்கையென் னையத் தோர்க்கே.'
(ஐங்குறு - நஅச.)

இஃது இடைச்சுரத்துச் செல்கின்றாள், தன்பதி செல்வாரைக் கண்டு கூறியது.

தமர் வந்துற்றவழிக் கூறியதற்குச் செய்யுள் —

'அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வ லென்னையை மறைத்த குன்றே.'
(ஐங்குறு - நஉ.)

எனவரும்.

மீண்டு வருவாள் ஆயத்தார்க்குக் கூறிவிட்டதற்குச் செய்யுள் —

'கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ்
சுரநனி வாரா நின்றன ளென்பது
முன்னுற விரைந்தநீ ருரைமி
னின்னகை முறுவலென் னையத் தோர்க்கே'
(ஐங்குறு - நகள.)

எனவரும்.

பிரிவாற்றாமைக்குச் செய்யுள் —

'அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.' (திருக்குற.பிரிவாற்-ந.)

எனவரும்.

'அஞ்சுவல் வாழி தோழி சென்றவர்
நெஞ்சணத் தெளித்த நம்வயின்
வஞ்சஞ் செய்தல் வல்லின வாறே'

எனவும்,

''அரும்பெறற் காதல ரகலா மாத்திர
மிரும்புத லீங்கை யிளந்தளிர் நடுங்க
வலங்குகதிர் வாடையும் வந்தன்று
கலங்களு ரெவ்வந் தோழிநா முறவே.'

எனவும் வருவன பிரிந்தார் என்றவழிக் கூறியன.

ஆற்றுவல் என்பதுபடக் கூறியதற்குச் செய்யுள் —

'தோளுந் தொடிநெகிழ்ந் தனவே நுதலும்
நெய்யுகு பள்ளி யாகுக தில்லை
யானஃ தவலங் கொள்ளேன் றானஃ
தஞ்சுவரு கான மென்றதற்
கஞ்சுவ ரேழி நெஞ்சத் தானே.'

எனவரும்.

தெய்வம் பராஅயதற்குச் செய்யுள் —

'புனையிழா யீங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய வாற்றிடைச்
சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ.'
(கலி. பாலை - கூ.)

எனவரும்.

பருவங்கண்டு கூறியதற்குச் செய்யுள் —

'என்னொடு புலந்தனர் கொல்லோ காதலர்
மின்னொடு முய்குதும் வானம்
நின்னொடு வருது மெனத்தெளிந் தோரே.'

எனவரும்.

வன்புறை யெதிரழிந்து கூறியதற்குச் செய்யுள் —

'வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய் தோன்றார்
பொறுக்கவென் றாற்பொறுக்க லாமோ — வொறுப்ப
பொன்னு ளுறுபவளம் போன்ற புணர்முருக்க [போற்
மென்னு ளுறுநோய் பெரிது.' (திணைமாலை கூஎ.)

எனவரும்.

தூதுவிடக் கூறியதற்குச் செய்யுள் —

'காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தெனை
விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே. (ஐங்குறு - கசo.)

எனவரும்.

ஆயத்தார் கூறியதற்குச் செய்யுள் —

'மாந்தர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
தான்வரு மென்ப தடமென் றோழி
யஞ்சின ளஞ்சின ளொதுங்கிப்
பஞ்சின் மெல்லடிப் பரல்வடுக் கொளவே.'

எனவரும்.

பாணர் கூறியதற்குச் செய்யுள் —

'நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
யீரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே.' (ஐங்குறு - சஅo.)

எனவரும்.

பார்ப்பார் கூறியதற்குச் செய்யுள் —

'துறந்ததற் கொண்டு துயரடச் சாஅ
யறம்புலந்து பழிக்கு மளைக ணாட்டி

யெவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன் ளோநின் மகளே
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.'
(ஐங்குறு - ந௩௩.)

எனவரும். (சரு)

## சசு. நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்.

இதுவும் பாலைக்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — முன்பு நிகழ்ந்தது பின்பு விசாரித்தற்கு ஏதுவு மாகும் என்றவாறு.

உம்மை எதிர்மறை.

உதாரணம் :

'வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை
கந்துபிணி யானை யயாவுயிர்த் தன்ன
வென்றூழ் நீடிய வேய்பிறங் கழுவத்துக்
குன்றூர் மதிய நோக்கி நின்றுநினைந்
துள்ளினே னல்லனோ யானே முள்ளெயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுத
லெமது முண்டோர் மதிநாட் டிங்க
ளுரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழற்பல
வுலவை யாகிய மரத்த
கல்பிறங்கு மாமலை யும்பரஃ தெனவே.' (நற்றி - சுஉ.)

எனவரும். (சசு)

## சஎ. நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே.

இதுவும் அது.

இதன் பொருள் — முன்பு நிகழ்ந்ததனைக் கூறிப் போகாதொழிதலும் பாலைத்திணையாம் என்றவாறு.

உதாரணம் :

'ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்
வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை
யுள்ளினெ னல்லனோ யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன வினியோண்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே.'(நற்றி-ந)

எனவரும். (சஎ)

## சஅ. மரபுநிலை திரியா மாட்சிய வாகி விரவும் பொருளும் விரவு மென்ப.

இதுவும் அது.

இதன் பொருள் — மரபுநிலை திரியாத மாட்சிமை யுடையவாகி விரவும் பொருளும் விரவும் என்ப என்றவாறு.

அஃதாவது, பாலைக்கோதிய பாசறைப் புலம்பற்கண்ணும், தேர்ப்பாகற்குக் கூறுதற்கண்ணும் முல்லைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் விரவுதலாம். பிறவும் இந்நிகரன. மரபுநிலை திரியாமை யாவது, பாசறைக்கண் வினைமுடித்தவழிக் கார்காலம் வந்ததாயின் ஆண்டுக் கூறும் கூற்று; அஃது அக் காலத்தைப்பற்றி வருதலின் மரபுநிலை திரியாதாயிற்று.

உதாரணம் :

'வேந்துவினை முடித்த' (அகம் - கO௪.)

என்னும் அகப்பாட்டினுள் கண்டுகொள்க.

இன்னும், 'மாட்சியவாகி விரவும் பொருளும் விரவும்' என்றதனால், பாசறைக்கண் தூதுகண்டு கூறுதலும் தலைமகளை இடைச்சுரத்து நினைத்துக் கூறுதலும் கொள்க.

உதாரணம் :

'நீடின மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல ளாகிப் பிறிதுநினைந்
தியாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே.' (ஐங்குறு-சஎஅ)

எனவரும்.

இது தூது கண்டு கூறியது.

'பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமோ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குயவுத்துணை யாகச்
சிறுவரைத் தங்குவை யாயிற்
காண்குவை மன்னாற் பாணவெந் தேரே.'(ஐங்குறு-சஎஎ)

இது தூது விடும் தலைமகன் கூறியது.

'நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
யொண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே.' (ஐங்குறு-௩உஉ)

இஃது இடைச்சுரத்துக் கூறியது. (சஅ)

சகூ. உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே.

இஃது உவம வகையான் ஐந்திணைக்கும் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — உள்ளுறைக்கண் வரும் உவமமும் ஒழிந்த உவமமும் என இருவகையானுந் திணை உணரும் வகை தப்பாதாகும் என்றவாறு.

உதாரணம் : முன்னர்க் காட்டுதும். (சகூ)

ருo. உள்ளுறை தெய்வ மொழிந்ததை நிலமெனக்
கொள்ளு மென்ப குறியறிந் தோரே.

இஃது உள்ளுறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — உள்ளுறையாவது கருப்பொருட் டெய்வம் ஒழிந்த பொருளை இடமாகக்கொண்டு வரும் என்று சொல்லுவர் அறிந்தோர் என்றவாறு.

குறி - இலக்கணம். (ருo)

ருக. உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருண் முடிகென
வுள்ளுறுத் துரைப்பதை யுள்ளுறை யுவமம்.

இஃது உள்ளுறை உவமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளை உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்துக் கூறுமது உள்ளுறை உவமம் என்றவாறு.

எனவே உவமையாற் கொள்ளும் வினை, பயன், மெய், உரு அன்றிப் பொருள் உவமையாற் கொள்ளப் படுவது என்க.

உதாரணம் :

'வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும் — நிறைமதுச்சேர்ந்
துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்
வண்டா மரைபிரிந்த வண்டு.'

(தண்டி. பொருளணி - ருஉ. ஒட்டணி - மேற்கோள்)

எனவரும்.

இது வண்டோரனையர் மாந்தர் எனக் கூறுதலான் உவமிக்கப்படும் பொருள் புலப்படாமையின் உள்ளுறை யுவமமாயிற்று. இதனுட் காவியும் தாமரையும் கூறுத லான் மருதத் திணையாயிற்று. (ருக)

**ரு௨. ஏனை யுவமந் தானுணர் வகைத்தே.**

இஃது ஏனை உவமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — உள்ளுறை யொழிந்த உவமம் தான் உணரும் வகையான் வரும் என்றவாறு.

தான் உணரும் வகையாவது, வண்ணத்தானுதல் வடிவானுதல் பயனுனுதல் தொழிலானுதல் உவமிக்கப் படும் பொருளோடு எடுத்துக் கூறுதல்.

அஃது ஆமாறு உவமவியலுட் கூறப்படும்.

இதனுல் திணை உணருமாறு :

‘வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.’
(ஐங்குறு - ௩௬௯.)

இஃது ஊடற் பொருண்மைத்தேனும் வேனிற் காலத்து நிகழும் குயிற் குரலை உவமித்தலிற் பாலைத் திணையாயிற்று. குரவம் — குராமரம்.

‘உரைத்திசிற் றோழியது புரைத்தோ வன்றே
துருக்கங் கமழு மென்றோ
டுறப்ப வென்றி யிறீஇயரென் னுயிரே.’
(சிற்றட்டகம் - குறிஞ்சி.)

இது துருக்கம் என உவமை கூறுதலாற் குறிஞ்சி யாயிற்று. (ரு௨)

**ரு௩. காமஞ் சாலா விளமை யோள்வயி**
**னேமஞ் சாலா விடும்பை யெய்தி**
**நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்**

றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெருஅன் சோல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே.

மேல் நடுவணைந்திணைக்கு உரிய பொருண்மை யெல்லாம் கூறினர்.

இது கைக்கிளையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — காமம் அமையாத இளையாள் மாட்டு ஏமம் அமையாத இடும்பை எய்திப் புகழ்தலும் பழித்தலும் ஆகிய இருதிறத்தால் தனக்கும் அவட்கும் ஒத்தன புணர்த்துச் சொல்லெதிர் பெருனுய்த் தானே சொல்லி இன்புறுதல் பொருந்தித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு என்றவாறு.

பொருந்தித் தோன்றும் என்றதனல் அகத்தொடு பொருந்துதல் கொள்க. என்னை, 'காமஞ்சாலா' என்றதனுல் தலைமைக்குக் குற்றம் வாராதாயிற்று என்க. 'புல்லித்தோன்றும்' என்றதனல் புல்லாமற் றோன்றுங் கைக்கிளையும் கொள்ளப்படும். அஃதாவது, காமஞ் சான்ற தலைமகண்மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி, அது களவியலுட் கூறப்படுகின்றது.

காமஞ்சாலா இளமையோள்வயின் கூறியதற்குச் செய்யுள் —

'ஊர்க்கா ணிவந்த பொதும்பரு ணீர்க்காற்
கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றைஇய பாவைகொ னல்லா [ளுல்
ருறுப்பெல்லாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பி
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ லாண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்

பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளிங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள் ;
இவளைச், சொல்லாடிக் காண்பென் றகைத்து ;
நல்லாய்கேள் ;
ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
தூதுணும் புறவெனத் துதைந்தநின் னெழினல
மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ ;
நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென வமைந்தநின் றடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்
கணங்காகு மென்பதை யறிதியோ வறியாயோ;
முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெ
பெயறுளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை [னப்
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டா
ருயிர்வாங்கு மென்பதை யுணர்தியோ வுணராயோ ;
எனவாங்கு ;
பேதுற்றாய் போலப் பிறரெவ்வ நீயறியாய்
யாதொன்றும் வாய்வாளா திறந்தீவாய் கேளினி
நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
விறையே தவறுடை யான்.' (கலி. குறிஞ் - ௨0.)

எனவரும். (௫௩)

௫௪. ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிற
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

இது பெருந்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — ஏறிய மடற்றிறமும், இளமை தீர்திறமும், தேறுத லொழிந்த காமத்து மிகுதிறமும்,

மிக்க காமத்து மாறுகிய * திறனொடு கூட்டிச் சொல்லப் பட்ட நான்கு திறமும் பெருந்திணைக் குறிப்பு ஆம் என்றவாறு.

கைக்கிளை புணராது நிகழும் என்றமையால், இது புணர்ந்தபின் நிகழும் என்று கொள்க. ஏறிய மடற்றிறம் தலைமகற்கே உரித்து. அது வருமாறு:

'எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தாற்
றொழின்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்
கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்
மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி
யென்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொல்லோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
யணிப்பூளை யாவிரை யெருக்கொடு பிணித்தியாத்து
மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு மிஃதொத்த
னெல்லீருங் கேட்டீமி னென்று;
படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
நல்கியா ணல்கி யவை;
பொறையென் வரைத்தன்றிப் பூநுத லீத்த
நிறையழி காமநோய் நீந்தி யறையுற்ற
வுப்பியல் பாவை யுறையுற் றதுபோல
வுக்கு விடுமென் னுயிர்;
பூளை பொலமல ராவிரை வேய்வென்ற
தோளா ளெமக்கீத்த பூ;
உரித்தென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த
பரிசழி பைதனோய் மூழ்கி யெரிபரந்த
நெய்யுண் மெழுகி னிலையாது பைய
தேயு மளித்தென் னுயிர்;
இளையாரு மேதி லவரு முளையயா
னுற்ற துசாவுந் துணை;
என்றியான் பாடக் கேட்டு

* 'மாறுகிய காமமும் எனச் சொல்லப்பட்ட' எனவும் பாடம்.

வன்புறு கிளவியா ளருளிவந் தளித்தலிற்
றுன்பத்திற் றுணையாய மடலி னிவட்பெற
வின்பத்து ளிடம்படலென் றிரங்கின ளன்புற்
றடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்த
முடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே.'
(கலி. நெய் - உக.)

எனவரும்.

இளமைதீர்திறம் என்பது, இளமை நீங்கிய திறத்தின்கண் நிகழ்வது. அது மூவகைப்படும்; தலைமகன் முதியனாகித் தலைமகள் இளையளாதலும், தலைமகள் முதியளாகித் தலைமகன் இளையனாதலும், இவ்விருவரும் இளமைப் பருவம் நீங்கியவழி அறத்தின்மேல் மனம் நிகழ்த்தலன்றிக் காமத்தின்மேல் மனநிகழ்த்தலும் என.

உதாரணம் :

'உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம் — விளைத்த
பழங்க ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கு புனலூரன் மூப்பு.'
(வெண்பா. இருபாற்பெரு - கச.)

எனவரும்.

இதனுள் தலைமகன் இளமை தீர்திறம் வந்தவாறு காண்க.

'அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல் — சுரும்போ
டிரும் புனலூரற் காரமிர்த மன்றோ
முதிரு முலையார் முயக்கு.'
(வெண்பா. இருபாற்பெரு - கங.)

இதனுள் தலைமகள் இளமை தீர்திறம் வந்தவாறு காண்க.

'ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று.' (கலி. மரு - உக)

எனவும்,

'உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது.' (கலி. மரு - உக.)

எனவும்,

முறையே தலைமகன் தலைமகள் ஆவார் இருவர் இளமை தீர்திறம் வந்தவாறு காண்க.

தேறுதல ஒழிந்த காமத்து மிகுதிறம் ஆவது, தெளிவு ஒழிந்த காமத்தின்கண்ணே மிகும் திறன்; இது பெரும் பான்மையும் தலைமகட்கே உரித்து.

உதாரணம்:

'புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை
யருகுவித் தொருவரை யகற்றலிற் றெரிவார்கட்
செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது
நயநின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்
பயனின்று மன்றம்ம காம மிவண்மன்னு
மொண்ணுத லாயத்தா ரோராங்குத் திளைப்பினு
முண்ணுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தன்
கண்ணினு முகத்தினு நகுபவள் பெண்ணின்றி
யாவருந் தண்குரல் கேட்ப நிறைவெண்பன்
மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே
பூவுயிர்த் தன்ன புகழ்சா லெழிலுண்க
ணுயிதழ் மல்க வழும்;
ஓஒ! அழிதகப் பாராதே யல்லல் குறுகினங்
காண்பாங் கனங்குழை பண்பு;
என்று,
எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற
வல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்;
எல்லாநீ,

உற்ற தெவனோமற் றென்றிரே லெற்சிதை
செய்தா னிவனென வுற்ற திதுவென
வெய்த வுரைக்கு முரனகத் துண்டாயிற்
பைதல வாகிப் பசக்குவ மன்னோவென்
னெய்தன் மலரன்ன கண்;
கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே
யாடையான் மூஉ யகப்படுப்பேன் சூடிய
காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன்;
தெள்ளியே மென்றுரைத்துத் தேரா தொருநிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ
யுள்ளி வருகுவர் கொல்லோ வளைந்தியா
னெள்ளி யிருக்குவென் மற்கொலோ நள்ளிருண்
மாந்தர் கடிகொண்ட கங்குற் கனவினற்
றோன்றின னாகத் தொடுத்தேன்மன் * யான்றனை இப்
பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து;
கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ;
மையில் சுடரே மலைசேர்தி யாயிற்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராயென்
றொய்யில் சிதைத்தானைத் தேர்கு;
சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ வெம்மை
நயந்து நலஞ்சிதைத் தான்;
மன்றப் பணைமேன் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ
மென்றோண் ஞெகிழ்த்தான் றகையல்லால் யான்காணே
னன்றுநீ தென்று பிற;
நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென்
னுயித ழுள்ளே கரப்பன் கரந்தாங்கே

* 'யான்றன்னை' எனவும் பாடம்.

நோயுறு வெந்நீர் தெளிப்பிற் றலைக்கொண்டு
வேவ தளித்திவ் வுலகு ;
மெலியப் பொறுத்தென் களைந்தீமின் சான்றீர்
நலிதருங் காமமுங் கௌவையு மென்றிவ்
வலிதி னுயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழும மிரண்டு ;
எனப்பாடி,
இனைந்துநொந் தழுதன் ணினைந்துநீ டுயிர்த்தன
ளெல்லையு மிரவுங் கழிந்தனவென் றெண்ணி யெல்லிரா
நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்த நீர்போலத் துணிபாங்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்று
ணல்லெழின் மார்பனைச் சார்ந்து.' (கலி. நெய் - உரு.)

எனவரும்.

மிக்க காமத்து மிடலாவது, ஐந்திணைக்கண் நிகழும் காமத்தின் மாறுபட்டு வருவது ; அதற்குரிய கிளவியா வன : வற்புறுத்துந் துணையின்றிச் செலவழுங்குதலும், ஆற்றருமை கூறுதலும், எதிரழிந்து கூறுதலும், இடையூறு கிளத்தலும், அஞ்சிக் கூறுதலும், மனைவி விடுத்தலிற் பிறள்வயின் சேரலும், இன்னோரன்ன ஆண்பாற் கிளவியும்; முன்னுறச் செப்பலும், பின்னிலை முயறலும், *கணவனுள்வழி இரவுத்தலைச் சேறலும், பருவமயங்கலும், இன்னோரன்ன பெண்பாற் கிளவியும்; குற்றிசையும், குறுங்கலியும், இன்னோரன்ன பிறவும் ஆகி ஒத்த அன்பின் மாறுபட்டு வருவன அவை யெல்லாங் கொள்ளப்படும்.

உதாரணம் :

'நடுங்கி நறுநுதலா ளன்னலம்பீர் பூப்ப
வொடுங்கி யுயங்க லொழியக் — கடுங்கணை
வில்லே ருழவர் விடரோங்கு மாமலைச்
செல்லே மொழிக செலவு' (வெண்பா. இருபாற்பெரு-க)

எனவரும். இது செலவழுங்கல்.

* 'கணவனுள்ளி இரவுத்தலைச் சேறல்' எனவும் பிரதிபேதம்.

'பணையா யறைமுழங்கும் பாயருவி நாடன்
பிணைபார மார்பம் பிணையத் — துணையாய்க்
கழிகாம முய்ப்பக் கனையிருட்கட் செல்கேன்
வழிகாண மின்னுக வான்.' (வெண்பா. பெருந்தி - சு.)

இஃது இரவுத்தலைச் சேறல்.

'பெரும்பணை மென்றோள் பிரிந்தாரெம் முள்ளி
வரும்பருவ மன்றுகொ லாங்கொல் — சுரும்பிமிரும்
பூமலி கொன்றை புறவெலாம் பொன்மலரு
மாமயிலு மாலு மலை.' (வெண்பா. இருபாற்பெருந்தி-சு.)

இது பருவமயங்கல்.

'கரிய பெருந்தடங்கண் வெள்வளைக்கை யாளை
மரிய கழிகேண்மை மைந்த — தெரியின்
விளிந்தாங் கொழியினும் விட்டகலார் தம்மைத்
தெளிந்தாரிற் றீர்வது தீது.'
(வெண்பா. இருபாற்பெருந்தி - கஎ.)

இது குற்றிசை. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

மெய்ப்பாட்டியலுள் —

'இன்பத்தை வெறுத்தல்' (மெய்ப்பாட் - உஉ.)

முதலாக நிகழ்பவை பொருளாக வருங் கிளவியும் இதன் பகுதியாகக் கொள்க. (ருச)

## ருரு. முன்னைய நான்கு முன்னதற் கென்ப.

இது கைக்கிளைக்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — முன்னைய நான்கும் — மேற்சொல்லப்பட்ட நான்கினும் முந்துற்ற நிலைமை நான்கும் என்றவாறு.

அவையாவன : ஏறுதமடற்றிறம், இளமை தீராத் திறம், தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறுகாத் திறம் என்பன.

முன்னதற்கு என்ப என்றது — இவை முற்கூறப் பட்ட கைக்கிளைக்காம் என்ப என்றவாறு.

ஏறுமடற்றிறம் — வெளிப்பட இரத்தலாம்.

இளமை தீராத்திறம் — நலம் பாராட்டலாம்.

தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம் — புணரா விரக்கமாம்.

மிக்க காமத்தின் மாறுகாத்திறம் — நயப்புற்று இரங்கலாம்.

இவை ஒருவாற்றான் உணர்த்தியவாறு.

'கைக்கிளை * செந்திறம் பெருந்திணை † நொந்திற
மத்திற மிரண்டு மகத்திணை மயங்கா
தத்திணை யானே யாத்தனர் புலவர்.'

என்றதனானே கைக்கிளை இன்பம் பயப்பவரும் என் பதும், பெருந்திணை துன்பம் பயப்பவரும் என்பதும் அறிந்துகொள்க. (ருரு)

ருசு. நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கங்
கலியே பரிபாட் டாயிரு பாவினு
முரிய தாகு மென்மனார் புலவர்.

இஃது அகத்திணைக்கு இன்றியமையாத செய்யுள் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — நாடக வழக்காவது — சுவைபட வருவனவெல்லாம் ஒரிடத்து வந்தனவாகத் தொகுத்துக்

* 'சேர்திறம்'
† 'நேர்திறம்' எனவும் பாடம்,

கூறுதல்; அஃதாவது செல்வத்தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின்நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போரும் அடுப்போரும் இன்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர்கள் களவொழுக்கம் நடத்தி இலக்கணவகையான் வரைந்தெய்தினார் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல்.

உலகியல் வழக்காவது — உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது.

*பாடல் சான்ற புலன் நெறி வழக்கம் என்றது — மேற் கூறிய இருவகை வழக்கானும் பாடுதல் சான்ற 'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்'க் கூறப்பட்ட அகப்பொருள் என்றவாறு.

கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும் உரியது ஆகும் என்மனார் புலவர் என்றது — கலியும் பரிபாடலும் என்னும் இரண்டு பாவினும் உரிமையுடைத்தாம் என்று உரைப்பர் புலவர் என்றவாறு. எனவே, இன்றியமையாது என்றவாறு. ஒழிந்த பாக்கள் இத்துணை, அகப்பொருட்கு உரியவாய் வருதலன்றிப் புறப்பொருட்கும் உரியவாய் வருதலின் ஓதாராயினர். புறப்பொருள் உலகியல்பானன்றி வாராமையின் அது நாடக வழக்கு அன்றாயிற்று.

ருஎ. மக்க ணுதலிய வகனைந் திணையுஞ்
சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறுஅர்.

இது நடுவணைந்திணைக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மக்கள் நுதலிய அகன் ஐந்திணையாவது — அகத்திணையுள் கைக்கிளை பெருந்திணை ஒழிந்த

* 'இவை இருவகையானும் பாடல்சான்ற' எனவும் பாடம்.

ஐந்திற்கும் உரியவாகிய நிலமும் காலமும் கருப்பொருளும் அன்றி மக்களைப்பற்றி வரும் புணர்தலும், பிரிதலும், இருத்தலும், இரங்கலும், ஊடலும் என்று சொல்லப்பட்ட பொருண்மை என்றவாறு.

சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறுஅர் என்பது — அவ் வைந்திணைக்கண்ணும் தலைமகனைப் புலநெறி வழக்கஞ் செய்யவேண்டின், நாடன் ஊரன் சேர்ப்பன் என்னும் பொதுப் பெயரானன்றி ஒருவர்க்கு உரித்தாகி வரும் பெயர் கொள்ளப் பெறார் என்றவாறு. (நஎ)

நஅ. புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல
தகத்திணை மருங்கி னளவுத லிலவே.

இஃது எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இதன் பொருள் — ஒருவன் பெயர் புறத்திணை மருங்கிற் பொருந்தினல்லது அகத்திணை மருங்கின் வருதல் இல்லை என்றவாறு.

இதனாற் சொல்லியது ஒருவற்கு உரித்தாகி வரும் பெயர் அகத்திணை பற்றிவரும் கைக்கிளை, பெருந்திணையினும் வரப்பெறாது என்பதூஉம், புறத்திணையுள் வரும் என்பதூஉம், ஆண்டும் பாடாண்பாட்டுள் காமம் பொருளாக வரின் அவ்வழி வரூஉம் என்பதும் கூறியவாறு. இதனானே அகப்பொருள் ஒருவரைச் சாராது பொதுப்பட வரும் என்பது கொள்க. (நஅ)

முதலாவது அகத்திணையியல் உரை முற்றிற்று.



இரண்டாவது

# புறத்திணையியல்

---

நுகூ. அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
யுட்குவரத் தோன்று மீரேழ் துறைத்தே.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், புறத்திணையியல் என்னும் பெயர்த்து; புறப்பொருள் உணர்த்துதலாற் பெற்ற பெயர்.

அஃது யாங்ஙனம் உணர்த்தினரோவெனின், மேல் அகத்திணையாகிய எழுதிணையுஞ் சாற்றி, அவற்றின் புறத்து நிகழ்வன எழுதிணை உணர்த்தினர் என்று கொள்க. அவை, மலையாகிய குறிஞ்சித்திணைப் புறம் நிரைகோடல் நிரை மீட்டல் என்னும் வேறுபாடு குறித்து வெட்சி எனவும் கரந்தை எனவும் இரண்டு குறிபெறுதலும், காடுறை யுலகாகிய முல்லைப் புறம் மண்ணசை வேட்கையால் எடுத்துச் செலவுபுரிந்த வேந்தன்மேல் அடல் குறித்துச் செலவு புரிதலான் அவ்விரு பெரு வேந்தரும் ஒரு வினையாகிய செலவு புரிதலின் அது வஞ்சி என ஒரு குறி பெறுதலும், புனலுலகாகிய மருதத்துப் புறம் எயில் அழித்தலும் எயில் காத்தலும் என்னும் வேறுபாடு குறித்து உழிஞை எனவும் நொச்சி எனவும் இரண்டு குறி

பெறுதலும், மணனுலகாகிய நெய்தற்புறம் இருபெரு வேந்தரும் பொருதலாகிய ஒரு தொழிலே புரிதலால் தும்பை என ஒரு குறிபெறுதலும், நடுநிலைத்திணை யாகிய பாலைப்புறம் வேந்தரே யாயினும் ஏனையோரா யினும் தமது மிகுதியாகிய வெற்றியைக் குறித்தலால் அது வாகை என ஒரு குறிபெறுதலும், பெருந்திணைப்புற மாகிய காஞ்சி நிலையாமையாகிய நோன்றிறப் பொருளே குறித்து வருதலின் காஞ்சி என ஒரு குறி பெறுதலும், கைக்கிளைப் புறமாகிய பாடாண்பகுதி செந்திற மாகிய ஒரு பொருளே குறித்து வருதலாற் பாடாண்டிணை என ஒரு குறி பெறுதலும் உணர்த்தியவாறு கண்டு கொள்க.

மேலை ஒத்தினுள்,

'புறத்திணை மருங்கிற் பொருந்தின்' (அகத்தி - ௫அ)

என்றமையான், உலகியலோடு ஒத்துவருங் காமம் பொரு ளாகப் பாடாண் பாட்டின்கண் இன்பம் இயற்பெயர் சார்த்தி வரப்பெறும் என்று கொள்க.

'ஆன்ற சிறப்பி னறம்பொரு ளின்பமென
மூன்றுவகை நுதலிய துலக மவற்று
ளறனு மின்பமு மகலா தாகிப்
புறனெனப் படுவது பொருள்குறித் தன்றே'

என்னும் பன்னிருபடலச் செய்யுளுள் புறப்பொருள், 'அறனும் இன்பமும் அகலாதாகி' எனக் கூறினர். அவ் வாறு கூறி வாகைத்திணைக்கண், 'கட்டினீத்தபால்' முத லாகக் 'காமநீத்தபால்' ஈறாக அறமே கூறுதலின் அச் சார்பாகக் கூறியது மயங்கக் கூறலாம்.

'ஆங்ஙன முரைப்பி னவற்றது வகையாற்
பாங்குறக் கிளந்தன ரென்ப வவைதாம்
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி

யுட்குவரு சிறப்பி னுழிஞை நொச்சி
முரண்மிகு சிறப்பிற் றும்பையுள் ளிட்ட
மறனுடை மரபின வேழே யேனை
யமர்கொண் மரபின் வாகையுஞ் சிறந்த
பாடாண் பாட்டொடு பொதுவிய லென்ப'

(பன்னிருபட)

எனவும்,

'கைக்கிளை யேனைப் பெருந்திணை யென்றாங்
கத்திணை யிரண்டு மகத்திணைப் புறனே' (பன்னிருபட)

எனவும் புறப்பொருள் பன்னிரண்டு வகைப்படக் கூறில், அகமும் பன்னிரண்டாகி மாட்டேறு பெறல் வேண்டும்; அகத்திணை எழாகிப் புறத்திணை பன்னிரண்டாகில்,

'மொழிந்த பொருளொ டொன்ற வைத்தல்.'

(மரபியல் - கக0)

என்னுந் தந்திரவுத்திக்கும் பொருந்தாதாகி,

'மிகைபடக் கூறல்.' (மரபியல் - க0அ)
'தன்னா னொருபொருள் கருதிக் கூறல்.' (மரபியல்-க0அ)

என்னுங் குற்றமும் பயக்கும் என்க. அன்றியும் பெருந் திணைப் புறனாகிய காஞ்சி நிலையாமை யாதலானும், பொது வியல் என்பது,

'பல்லமர் செய்து படையுட் டப்பிய
நல்லாண் மக்க ளெல்லாரும் பெறுதலிற்
றிறப்பட மொழிந்து தெரிய விரித்து
முதற்பட வெண்ணிய வேழ்திணைக்கு முரித்தே'

(பன்னிருபட)

எனத் தாமே கூறுகின்றாராகலின் மறத்திற்கு முதலாகிய வெட்சியில் எடுத்துக்கோடற்கண்ணுங் கூறாமையானும், கைக்கிளையும் பெருந்திணையும் புறம் என்றாராயின் அகத் திணை எழ் என்னாது ஐந்து எனல் வேண்டுமாதலானும், பிரமம் முதலாகச் சொல்லப்பட்ட மணம் எட்டனுள்ளும்

யாழோர் கூட்டமாகிய மணத்தை யொழித்து ஏனைய ஏழும் புறப்பொருளாதல் வேண்டுமாதலானும், முனை வன் நூலிற்கும் கலி முதலாகிய சான்றோர் செய்யுட்கும் உயர்ந்தோர் வழக்கிற்கும் பொருந்தாது என்க.

அஃதற்றாக, இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் வெட்சித்திணைக்கு இடமும் துறையும் வரை யறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதனானே திணையும் துறையும் என வரும் புறப் பொருள் என்று கொள்க.

இதன் பொருள் — அகத்திணை மருங்கின் அரில் தப உணர்ந்தோர் புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப் பின் — அகத்திணையிடத்து மயக்கங்கெட உணர்ந்தோர் புறத்திணை இலக்கணத்தை வகைப்படக் கூறின்; வெட்சி தானே குறிஞ்சியது புறனே — வெட்சி என்னுந் திணை குறிஞ்சித் திணைக்குப் புறனாம்.

அகத்திணை மருங்கின் மயக்கங்கெட உணர்தலாவது மேலோதிய இலக்கணத்தால் மயக்கங்கெட உணர்தல். வெட்சி குறிஞ்சித் திணைக்குப் புறனாயது எவ்வாறெனின், நிரைகோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந் நிலத்தின் மக்களாயினார் பிற நாட்டு ஆனிரையைக் களவிற்கோடல் ஒரு புடை குறிஞ்சிக்கு உரித்தாகிய களவொடு ஒத்தலானும் என்க. சூடும் பூவும் அந் நிலத்திற்கு உரிய பூவாதலானும் அதற்கு அது புறமாம்.

உட்கு வரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே — அவ் வெட்சித்துறை உட்குவரத் தோன்றும் பதினான்கு துறையை உடைத்து என்றவாறு.

துறை பதினான்கும் வருகின்ற சூத்திரத்துள் காட் டுதும். (க)

சூஅ. வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி
னாதந் தோம்பன் மேவற் றாகும்.

இது வெட்சித்திணை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலம் களவின் ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும் என்றது — வேந்தனால் விடப்பட்ட முனையூரகத்துள்ளார் வேற்று நாட்டின்கண் களவினான் ஆநிரை கொண்டு பெயர்ந்து பாதுகாக்கும் மேவலை யுடைத்து என்றவாறு.

ஓம்புதலாவது மீளாமற் காத்தல். புறப்பொருட் பாகுபாடாகிய பொருளினும் அறத்தினும் பொருள் தேடுதற்கு உரிய நால்வகை வருணத்தாரினுஞ் சிறப்புடையார் அரசராதலானும், அவர்க்கு மாற்றரசர்பால் திறை கொண்ட பொருள் மிகவும் சிறந்ததாகலானும், அப் பொருள் எய்துங்கால் அவரைப் போரில் வென்றுகோடல் வேண்டுதலானும், போர்க்கு முந்துற நிரைகோடல் சிறந்ததாகலானும், இப் பொருள் முற் கூறப்பட்டது.

பன்னிருபடலத்துள்

'தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்
றன்னவிரு வகைத்தே வெட்சி'

என இரண்டு கூறுபடக் கூறினாராயினும், முன்வருகின்ற வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின எடுத்துச் செலவு, * எயிலழித்தல், போர்செய்தல் என்பன அரசர்மேல் இயன்று வருதலின் 'வேந்துறு தொழில்' ஒழித்துத் 'தன்னுறு தொழில்' எனத் தன்னாட்டும் பிறர் நாட்டும் களவின் ஆநிரை கோடலின் இவர் அரசரது ஆணையை நீங்கினார் ஆவர்; ஆதலால், அவர் அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம்; அதனால் பன்னிருபடலத்துள் வெட்சிப்படலம் தொல்காப்பியர் கூறினார் என்றல் பொருந்தாது. என்னை ?

* 'எயில் காத்தல்' எனவும் பாடம்.

'ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
யீரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரி
னூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்'
(மரபியல் - கூஅ)

எனவும்,

'சிதைவெனப் படுபவை வசையற நாடிற்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதன் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கங் கூற
றன்னா னொருபொருள் கருதிக் கூற
லென்ன வகையினு மனங்கோ ளின்மை
யன்ன பிறவு மவற்றுவிரி யென்ப' (மரபியல் - ௧0அ)

எனவும் இவ்வாறு கூறிய ஆசிரியர் தாமே மாறுகொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில மொழிதல், மயங்கக் கூறல், தன்னா னொருபொருள் கருதிக் கூறல் என்னும் குற்றம் பயப்பக் கூறினர் என வருமாகலான். (உ)

சூக. படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
வொற்றி னாகிய வேயே வேய்ப்புற
முற்றி னாகிய புறத்திறை முற்றிய
வூர்கொலை யாகோள் பூசன் மாற்றே
நோயின் றுய்த்த னுவல்வழித் தோற்றந்
தந்துநிறை பாதீ டுண்டாட்டுக் கொடையென
வந்த வீரேழ் வகையிற் றாகும்.

இது வெட்சித்திணைக்கு உரிய துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — படையியங்கு அரவம் முதலாகக் கொடை ஈறுகச் சொல்லப்பட்ட பதினன்கு துறையை உடைத்து வெட்சித்திணை என்றவாறு.

வெட்சி என்பது அதிகாரத்தான் வந்தது. * 'பிள்ளை வழக்கு' † 'புலனறி சிறப்பு' முதலியன அத்துணைச் சிறப்பில; இத்திணைக்கு உரிய துறை இவையே எனல் சுட்டப் பெயர்த்தும் 'ஈரேழ் வகையிற்று' என்றார்.

படை இயங்கு அரவம் என்பது — நிரைகோடல் கருதிப் படை எழும் அரவம் என்றவாறு.

உதாரணம் :

'நெடிபடு கானத்து நீள்வேன் மறவ
ரடிபடுத் தாரதர் செல்வான் — றுடிபடுத்து
வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
கட்சியுட் காரி கலுழ்ம்' (வெண்பா. வெட்சி - ௩)

எனவரும்.

பாக்கத்து விரிச்சி என்பது — குறித்த பொருளின் பயன் அறிதற்குப் பாக்கத்துக்கண் நற்சொல் ஆய்தல் என்றவாறு.

உதாரணம் :

'எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றிற்
குழுவினங் கைகூப்பி நிற்பத் — தொழுவிற்
குடக்கணு கொண்டுவா வென்றாள் குனிவிற்
றடக்கையாய் வென்றி தரும்' (வெண்பா. வெட்சி - ச)

எனவரும்.

* பிள்ளைவழக்கு — 'பொய்யாது புண்மொழிந்தார்க்கு
வையாது வழக்குரைத்தன்று'
(வெண்பா. வெட்சி - கஅ)

† புலனறிசிறப்பு — 'வெம்முனைநிலை யுணர்த்தி யோர்க்குத்
தம்மினுமிகச் சிறப்பீந்தன்று'
(வெண்பா. வெட்சி - கஎ)

புடைகெடப் போகிய செலவு என்பது — பக்கங் கெடப் போகிய செலவு என்றவாறு.

பக்கங் கெடுதலாவது, மாற்றரசர் பக்கத்தாராகித் தம்மாட்டு ஒற்றொடு நிற்பார் அறியாமற் போதல். பக்கத்திலுள்ளாரைப் பக்கம் என்றார் ஆகுபெயரான்.

உதாரணம்:

> 'கூற்றினத் தன்னார் கொடுவி லிடனேந்திப்
> பாற்றினம் பின்படா முன்படர்ந் — தேற்றின
> நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய
> குன்றங் கொடுவில் லவர்' (வெண்பா. வெட்சி - ௫)

எனவரும்.

புடைகெட ஒற்றின் ஆகிய வேயே என்பது — மாற்றரசர் பக்கத்துள்ளார் அறியாதவகை ஒற்றியதனான் ஆகிய ஒற்றுச் சொல்லும் என்றவாறு.

'ஒற்று' என்பது எவ்விடத்தும் வேண்டுமாயினும், ஆதிவிளக்காக இவ்வோத்தின் முதற்கண் வைத்தார் என்று கொள்க.

உதாரணம்:

> 'நிலையு நிறையு நிரைப்புறத்து நின்ற
> சிலையுஞ் செருமுனையுள் வைகி — யிலைபுனைந்த
> கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோய் சென்றறிந்து
> நள்ளிருட்கண் வந்தார் நமர்' (வெண்பா. வெட்சி - ௬)

எனவரும்.

வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்து இறை என்பது — அவ்வாறு வேய்க்கப்பட்ட இடத்தின் புறத்தினைச் சூழ்தலான் ஆகிய புறத்திருக்கையும் என்றவாறு.

'வேய்' என்பது அவ்விடத்தின்மேல் ஆகுபெயராய் 'வேய்' என நின்றது.

உதாரணம் :

'உய்ந்தொழிவா ரீங்கில்லை யூழிக்கட் டீயேபோன்
முந்தமரு ளேற்றார் முரண்முருங்கத் — தந்தமரி
னெற்றினா னய்ந்தாய்ந் துறுவலி யோரரணஞ்
சுற்றினார் போகாமற் சூழ்ந்து' (வெண்பா. வெட்சி - எ)

எனவரும்.

முற்றிய ஊர்கொலை என்பது — அவ்வாறு சூழப்பட்ட ஊரை அழித்தல் என்றவாறு.

உதாரணம்:

'இகலே துணையா வெரிதவழச் சீறிப்
புகலே யரிதென்னார் புக்குப் — பகலே
தொலைவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு'
(வெண்பா. வெட்சி - அ)

எனவரும்.

ஆகோள் என்பது — ஆண்டு உளதாகிய நிரையைக் கோடல் என்றவாறு.

உதாரணம்:

'கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தா
னெடுவரை நீள்வேய் நரலு — நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை' (வெண்பா. வெட்சி - கூ)

எனவரும்.

பூசல் மாற்று என்பது — அவ்வாறு கொண்ட நிரையை மீட்டற்கு வந்தார் பொரும் பூசல் மாற்றிப் பெயர்தல் என்றவாறு.

உதாரணம்:

'சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணியத் — தாழ்ந்த
குலவுக் கொடுஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப் புள்' (வெண்பா. வெட்சி - க0)

எனவரும்.

நோயின்று உய்த்தல் என்பது — அவ்வாறு கொண்ட நிரையை வருந்தாமல் உய்த்தல் என்றவாறு.

உதாரணம்:

‘செருப்பிடைச் சிறுபரல் அன்ன கணைக்கா
லவ்வயிற் றகன்ற மார்பிற் பைங்கட்
குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்
செவியிறந்து தாழ்தருங் கவுளன் வில்லோ
டியார்கொலோ வளியன் றானே தேரி
னூர்பெரி திகந்தன்று மிலனே யரணெனக்
காடுகைக் கொண்டன்று மிலனே காலைப்
புல்லா ரினநிரை செல்புற நோக்கிக்
கையிற் சுட்டிப் பையென வெண்ணிச்
சிலையின் மாற்றி யோனே யவைதா
மிகப்பல வாயினு மென்னா மெனைத்தும்
வெண்கோ டோன்றாக் குழிசியொடு
நாளுறை மத்தொலி கேளா தோனே’ (புறம் - உருஎ)

எனவரும்.

நுவல்வழித் தோற்றம் என்பது — தமர் * நுவன்ற வழித் தோன்றுதல் என்றவாறு.

‘நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவ லிட்ட புன்காற் பந்தர்ப்
புனறரு மிளமண னிறையப் பெய்ம்மி
னொன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வரூஉ மென்னைக்
குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே’

(புறம் - உசுஉ)

எனவரும்.

தந்துநிறை என்பது — கொள்ளப்பட்ட நிரையைத் தம் ஊரகத்துக் கொணர்ந்து நிறுத்தல் என்றவாறு.

* ‘நுவன்றுழி’ எனவும் ‘கவன்றுழி’ எனவும் பாடம்.

14

உதாரணம் :

'தண்டாா் விருப்பின டன்னை தலைமலைந்த
வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று — கண்டா
ளணிநிரை வாண்முறுவ லம்மா வெயிற்றி
மணிநிரை மல்கிய மன்று.' (வெண்பா. வெட்சி - கங)

எனவரும்.

பாதீடு என்பது — அந்நிரையைக் கூறிடுதல் என்றவாறு.

உதாரணம் :

'ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் — விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை.' (வெண்பா. வெட்சி - கச)

எனவரும்.

உண்டாட்டு என்பது — நிரைபகுத்த மறவர் களிப்பினால் அயரும் விளையாட்டு என்றவாறு.

உதாரணம் :

'இளிகொண்ட தீஞ்சொ விளமா வெயிற்றி
களிகொண்ட நோக்கங் கவற்றத் — தெளிகொண்ட
வெங்கண் மலிய விளிவதுகொல் வேற்றூர்மேற்
செங்கண் மறவர் சினம்.' (வெண்பா. வெட்சி - கரு)

எனவரும்.

கொடை என்பது — பகுத்த நிரையை வேண்டி இரப்பார்க்குக் கொடுத்தல் என்றவாறு.

உதாரணம் :

'இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள்
கொல்லன் றுடியன் கொளைபுணர்சீர் வல்ல
நல்லியாழ்ப் பாணர்தம் முன்றி னிறைந்தன.'

'முருந்தே ரிளநகை காணாய்நின் னையர்
கரந்தை யலறக் கவர்ந்த நிரைகள்
கள்விலை யாட்டிநல் வேய்தெரி கானவன்
புள்வாய்ப்புச் சொன்னகணி முன்றி னிரைந்தன.'

'கயமலர் ருண்கண்ணாய் காணாய்நின் னைய
ரயலூ ரலற வெறிந்தநல் லானிரைக
ணயனின் மொழியி னரைமுது தாடி
யெயின ரெயிற்றியர் முன்றி னிறைந்தன.'
(சிலப். வேட்டுவவரி)

எனவரும்.

(ரு)

சூ௨. மறங்கடை கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையு மத்திணைப் புறனே.

இதுவும் அது.

இதன் பொருள் — குடியினது நிலைமையைக் கூறலும் கொற்றவையது நிலைமையைக் கூறலும் குறிஞ்சித்திணைப் புறனாகிய வெட்சித்திணையாம் என்றவாறு.

மறம் கடைகூட்டிய குடிநிலை என்பது — மறத் தொழின் முடித்தலை யுடைய குடியினது நிலைமையைக் கூறல் என்றவாறு.

'குடிநிலை' என்றதனான் மைந்தர்க்கும் மகளிர்க்கும் பொதுவாதல் அறிக.

உதாரணம்:

'யானை தாக்கினு மரவுமேற் செலினு
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்
சூன்மகண் மாறா மறம்பூண் வாழ்க்கை
வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த
புலிப்போத் தன்ன புல்லணர்க் காளைச்
சென்னா யன்ன கருவிற் சுற்றமொடு
கேளா மன்னர் கடிபுலம் புக்கு

நாளா தந்து நறவுநொடை தொலைச்சி
யில்லடு கள்ளின் றோப்பி பருகி
மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை யழிகன்ன குரம்பை.'
(பெரும்பாண். கஙஉ - கசச)

எனவரும். இது 'மறங்கடை கூட்டிய குடிநிலை' மைந்தரியல் கூறியது.

'கெடுக சிந்தை கடிதிவ ளுணிவே
மூதின் மகளி ராதல் தகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற்கிவள் கொண்கன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே
இன்றும்
செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
யொருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.' (புறம் - உஎக)

இது மறம்கடைகூட்டிய குடிநிலை மகளிர் இயல் கூறியது.

இவற்றுள் ஆண்பால் பற்றி வந்ததனை * இல்லாண் முல்லை' எனவும், பெண்பால்பற்றி வந்ததனை † 'மூதின் முல்லை' எனவும் கூறுப.

கொற்றவைநிலை என்பது — கொற்றவையது நிலையைக் கூறல் என்றவாறு.

* இல்லாண்முல்லை — 'கழுமிய காதற் கணவனைப் பழிச்சி
யிழுமென் சீர்த்தி யின்மலி புரைத்தன்று.'
(வெண்பா. முல்லைப்பொதுவி - ரு)

† மூதின் முல்லை — 'அடல்வே லாடவர்க் கன்றியு மவ்வின்
மடவரன் மகளிர்க்கு மறமிகுத் தன்று.'
(வெண்பா. வாகை - உக)

இதனனே குறிஞ்சித்திணைக்கு முருகவேளேயன்றிக் 'கொற்றவை'யும் தெய்வம் என்பது பெற்றும்.

உதாரணம் :

'ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக்
கூளி மலிபடைக் கொற்றவை — மீளி
யரண்முருங்க வாகோள் கருதி னடையார்
முரண்முருங்கத் தான்முந் துறும்.'
(வெண்பா. வெட்சி - உ0)

எனவரும்.

(ச)

சூரு. வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளு முறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்
போந்தை வேம்பே யாரென வருஉ
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவ ரேத்திய
வோடாக் கழனிலை யுளப்பட வோடா
வுடல்வேந் தடுக்கிய வுன்ன நிலையு
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
றுவா விழுப்புகழ்ப் பூவை நிலையு
மாரம ரோட்டலு மாபெயர்த்துத் தருதலுஞ்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலுந்
தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்த்தலு
மனைக்குரி மரபினது கரந்தை யன்றியும்
வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்
றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்
வாண்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க
நாடவற் கருளிய பிள்ளை யாட்டுங்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்
சீர்த்தகு மரபிற் பெரும்படை வாழ்த்தலென்

றிருமூன்று மரபிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட வெழுமூன்று துறைத்தே.

இது, * வெட்சித்திணைக்கு உரிய துறை கூறினர், இனி அதற்கு மாறாகிய கரந்தைத் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று. அதுவும் ஆநிரை மீட்டல் காரணமாக அந் நிலத்தின்கண் நிகழ்வதாகலின் வெட்சியின்பாற் பட்டுக் குறிஞ்சியின் புறன் ஆயிற்று.

இதன் பொருள் — 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட் டயர்ந்த காந்தள்' முதலாக †'வாழ்த்து' ஈறாகக் கல்லொடு புணர்த்துக் கூறுந் துறையொடு கூடச் சொல்லப்பட்ட திணை இருபத்தொரு துறைத்து என்றவாறு.

வெறிஅறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டு அயர்ந்த காந்தளும் என்பது — வெறியாடுதலை அறியுஞ் சிறப்பினையுடைய வெவ்விய வாயினையுடைய வேலன் ‡ வெறியாடலைச் செய்த காந்தளும் என்றவாறு.

காந்தள் என்பது மடலேறுதலான் அத்துணையாற்றுளாகிய பெண்பால்மாட்டு நிகழும். வெறி காந்தள் எனவும் பெயராம். இதனனே காமவேட்கையின் ஆற்றுளாகிய பெண்பாற் பக்கமாகிய வெறியும் அந்நிலத்துள்ளார் § வென்றி வேண்டியாடும் வெறியுங் கொள்ளப்படும். இவ்வெறி இந்நிலத்திற்குச் சிறந்தமை அறிக. இது வெட்சிப் பின்னர் வைத்தார், பெரும்பான்மையுங் குறிஞ்சி பற்றி நிகழுமாகலின்.

---

* 'வேலன் முதலாக வெட்சித்திணை' எனவும் பாடம்.

† 'தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்த்தலும் என்பதீறாகச் சொல்லப் பட்ட பதின்மூன்று துறையும், காட்சி முதலாக வாழ்த்து ஈறாக' எனவும் பாடம்.

‡ 'வெறியாடிய காந்தளும்' எனவும் பாடம்.

§ 'ஆராவென்றி' எனவும் பாடம். 'சூரர் வென்றி' என்று வாசித்தலும் ஒன்றும்.

உதாரணம் :

'வெய்ய நெடிதுயிரா வெற்ப னளிநினையா
வைய நனிநீங்க வாடினாண் — மைய
லயன்மனைப் பெண்டிரோ டன்னைசொ லஞ்சி
வியன்மனையு ளாடும் வெறி.' (வெண்பா. பெருந்தி - ௧௦)

எனவரும். இது காமவேட்கை தோற்றுமல் தலைமகள் தானே * முருகற்கென வெறியாடியது. வென்றி வேண்டி யாடுதற்குச் செய்யுள் சிலப்பதிகார வேட்டுவவரியுள் கண்டு கொள்க. இனி வேலன் தானே யாடியதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டு கொள்க.

உறுபகை வேந்து இடை தெரிதல் வேண்டி ஏந்து புகழ்ப் போந்தை வேம்பே ஆர் என வரூஉம் மாபெரும் தானையர் மலைந்த பூவும் என்றது — மிக்க பகைவேந்தன் வேறுபாடு தெரிதல் வேண்டி உயர்ந்த புகழையுடைய போந்தை எனவும் வேம்பு எனவும் ஆர் எனவும் கொண்ட தமிழ்நாட்டு நிலவேந்தர் மாபெருந் தானையர் சூடிய பூவும் என்றவாறு.

அந்நில வேந்த ராவார் சேர பாண்டிய சோழர்.

'குடையலர் காந்தட்டன் கொல்லிச் சுனைவாய்த்
தொடையவிழ் தண்குவளை சூடான் — புடைதிகழுந்
தேரதிரப் பொங்குந் திருந்துவேல் வானவன்
போரெதிரிற் போந்தையாம் பூ'

இது சேரன் பூ. (வெண்பா. பொதுவி - ௧)

'தொடையணிதோ ளாடவர் தும்பை புனையக்
கொடியணிதேர் கூட்டணங்கும் போழ்தின் — முடியணி
காத்தல்சால் செங்கோற் கடுமா னெடுவழுதி [யுங்
யேத்தல்சால் வேம்பி னிணர்' (வெண்பா. பொதுவி - ௨)

இது பாண்டியன் பூ.

* 'முருகெ்கன' – 'முருகுமென' எனவும் பாடம்.

'கொல்களி றூர்வர் கொலைமலி வாண்மறவர்
வெல்கழல் வீக்குவர் வேலிளையர் — மல்குங்
கலங்க லொலிபுனற் காவிரி நாட
னலங்க லமரழுவத் தார்' (வெண்பா. பொதுவி - ௩)

இது "சோழன் பூ.

நிரைகோள் கேட்டவழி நெடுநில வேந்தரும் கதும் என எழுவர் ஆகலின் நிரைமீட்டலின் கண் பூப் புகழப் பட்டது.

வாடா வள்ளி என்பது — வாடுதல் இல்லாத வள்ளி என்றவாறு.

வள்ளி என்பது ஒரு கூத்து. அஃது அந்நிலத்தின் நிகழ்தலின் 'வாடா வள்ளி' என்றார். உதாரணம் வந்துழிக் காண்க.

வயவர் ஏத்திய ஓடாக் கழனிலை உளப்பட என் பது — வீரராற் புகழப்பட்ட கெடாத கழனிலை கூட்டி என்றவாறு.

உதாரணம் :

'வாளமரின் முன்விலக்கி வான்படர்வார் யார்கொலோ
கேளலார் நீக்கிய கிண்கிணிக்காற் — காளை
கலங்கழல் வாயிற் கடுத்தீற்றி யற்றாற்
பொலங்கழல் கான்மேற் புனைவு'
(வெண்பா. பொதுவி - எ)

எனவரும்.

ஓடா உடல் வேந்து அடுக்கிய உன்னநிலையும் என் பது — அடி பிறக்கிடா வெகுண்ட வேந்தரைச் சார்த்திய உன்ன நிலையும் என்றவாறு.

உன்னம் என்பது ஓர் மரம். அது தன் நாட்டகத் துக் கேடுவருங்கால் உலறியும், வாராதகாலம் குழைந்தும் நிற்கும்.

உதாரணம் :

'துன்னருந் தானைத் தொடுகழலான் றுட்பெதிர்ந்து
முன்னர் வணங்கார் முரண்முருங்க — மன்னரு
மீடெலாந் தாங்கி யிகலவிந்தார் நீயுநின்
கோடெலா முன்னங் குழை' (வெண்பா. பொதுவி-௬)

எனவரும். பிறவும் நிமித்தமாக வருவன வெல்லாவற் றிற்கும் இதுவே துறையாகக் கொள்க.

மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பில் தாவா விழுப் புகழ்ப் பூவை நிலையும் என்பது — மாயோனைப் பொருந் திய நிலைபெற்ற பெருஞ் சிறப்பினையுடைய கெடாத விழு மிய புகழைப் பொருந்திய பூவைநிலையைக் கூறுதலும் என்றவாறு.

மாயோன் — காத்தற் கடவுள்; பூவை மலர்ச்சி யைக் கண்டு மாயோன் நிறத்தை ஒத்ததெனப் புகழ்தல். 'காயாம்பூ வண்ணன்' என நிறஞ்சுட்டி வழங்கலுங் கொள்க. பூவை — காயா. நாட்டெல்லை காடாதலின் அக்காட்டிடைச் செல்வோர் அப்பூவையைக் கண்டு கூறு தல். 'உன்னம்' கண்டு கூறினாற்போல இதுவுமோர் வழக்கு. இஃது உரைநயனாற் கண்டுணரற்பாற்று.

உதாரணம் :

'பூவை விரியும் புதுமலரிற் பூங்கழலோ
யாவை விழுமிய யாமுணரே — மேவார்
மறத்தொடு மல்லர் மறங்கடந்த காளை
நிறத்தொடு நேர்தருத லான்' (வெண்பா. பாடாண் - ௬)

இஃது உரையன்று என்பார் மாயோன் முதலாகிய தேவர்களோடு உவமித்தலே பூவைநிலை என்ப.

உதாரணம் :

'இந்திர னென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த
வந்தரத்தா னென்னிற் பிறையில்லை — யந்தரத்துக்
கோழியா னென்னின் முகநென்றே கோதையை
யாழியா னென்றுணரற் பாற்று'

எனவரும். அங்ஙனமாயின்,

'ஒன்றின முடித்த றன்னின முடித்தல்' (மரபி - ககO)

என்பதுபற்றி வேறு கடவுளரை நோக்கி உவமித்து வருபவை யெல்லாம் பூவை நிலையாகக் கொள்க. என்னை ?.

'எற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனு
மாற்றலு மாள்வினையு மொத்தொன்றி னெவ்வாரே
கூற்றக் கணிச்சியோன் கண்மூன் றிரண்டேயா
மாற்றல்சால் வானவன் கண்'

என முத்தொள்ளாயிரத்து வந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

'பூவை நிலை'யும் அந்நிலத்தின் தெய்வமாகிய கருப்பொருளாதலின் அதன்மேல் வந்தது.

ஆர் அமர் ஓட்டலும் என்பது — அரிய அமரைப் போக்குதலும் என்றவாறு. அரிய அமராவது சிறந்து செருமலைதல்.

உதாரணம் :

'புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமு மானமுந் தேசு — மொலிக்கு
மருமுனை வெஞ்சுரத் தான்பூசற் கோடிச்
செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து' (வெண்பா. கரந் - ச)

எனவரும்.

ஆ பெயர்த்துத் தருதல் என்பது — நிரைமீட்டல். என்றவாறு.

உதாரணம் :

"அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றாற் — செழுங்குடிக
டாரார் கரந்தை தலைமலைந்து தாங்கோட
னேரார்கைக் கொண்ட நிரை' (வெண்பா. கரந் - க)

எனவரும்.

'ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா
திலைபுதை பெருங்காட்டுத் தலைக்கரந் திருந்த

வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்க நின்னுள
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே'(புறம். உருக)

என வருவதும் அது.

சீர்சால் வேந்தன் சிறப்பு எடுத்து உரைத்தலும் என்பது — சீர்மை பொருந்திய வேந்தனது மிகுதியை எடுத்துக் கூறலும் என்றவாறு.

உதாரணம் :

'அங்கையு ணெல்லி யதன்பய மாதலாற்
கொங்கலர் தாரான் குடைநிழற்கீழ்த் — தங்கிச்
செயிர்வழங்கும் வாளமருட் சென்றடையார் வேல்வா
யுயிர்வழங்கும் வாழ்க்கை யுறும்' (வெண்பா. கரந் - கரு)

எனவரும். இஃது ஏனைய திணைக்கும் பொது.

தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும் என்பது — தன்மாட்டுள்ள போர்வலி முயற்சியினாலே கொடுஞ் சொற்களைத் தன்னொடு புணர்த்திக் கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி
வாளொடு வைகுவேன் யானாக — நாளுங்
கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்
பிழிமது வுண்பார் பிறர்' (வெண்பா. கரந் - கக)

எனவரும்: இது மற்றுள்ள திணைக்கும் பொது.

மனைக்குரி மரபினது கரந்தை என்றது — வென்றவர் மனைக்கே யுரிய சூட்டும் மரபினை யுடையதான கரந்தை என்றவாறு. எனவே அவர்க்கு அதனை அறிவுடையோர் சூட்டல் உய்த்துணர்க. உதாரணம் வந்துழிக் காண்க.

அன்றியும் என்பது அக் கரந்தை அல்லாமலும் என்றவாறு.

வருதார் தாங்கல் வாள் வாய்த்துக் கவிழ்தல் என்று இருவகைப்பட்ட பிள்ளை நிலையும் என்பது — மேல் வருகின்ற கொடிப் படையைத் தாங்கலும் வாள்வாய்த்தலால் படுதலும் என இருவகைப்பட்ட பிள்ளை நிலையும் என்றவாறு.

உதாரணம் :

'பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க வாளெறிந்து
கொள்ளைகொள் ளாயந் தலைக்கொண்டா — ரெள்ளிப்
பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளா
னொருதனியே நின்றா னுளன்' (வெண்பா. கரந் - எ)

எனவரும். இது வருதார் தாங்கல்.

'உரைப்பி னதுவியப்போ வொன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை சென்றான் — புரைப்பின்
றுளப்பட்ட வாயெல்லா மொள்வாள் கவரக்
களப்பட்டான் றோன்றான் கரந்து' (வெண்பா. கரந்-கூ).

இது வாள்வாய்த்துக் கவிழ்தல்.

வாள் மலைந்து எழுந்தோனை மகிழ்ந்து பறை தூங்க நாடு அவற்கு அருளிய பிள்ளையாட்டும் என்பது — வாளான் மாறுபட்டு எழுந்தவனை மகிழ்ந்து பறை ஒலிப்ப அவற்குத் துறக்கமாகிய நாட்டை அளித்த பிள்ளையாட்டும் என்றவாறு.

உதாரணம் :

'மாட்டிய பிள்ளை மறவர் நிறந்திறந்து
கூட்டிய வெஃகங் குடர்மாலை — சூட்டியபின்
மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட
வேறிரிய விம்முந் துடி' (வெண்பா. கரந் - க)

எனவரும்.

காட்சி என்பது — போர்க்களத்துப் பட்ட வீரரைக் கல் நிறுத்தற் பொருட்டுக் சற் காண்டல் என்றவாறு.

உதாரணம் :

'மிகையணங்கு மெய்ந்நிறீஇ மீளி மறவர்
புகையணங்கப் பூமாரி சிந்திப் — பகையணங்கும்
வேளைக் கடுங்கணையால் வேறாகி விண்படர்ந்த
காளைக்குக் கண்டமைத்தார் கல்'(வெண்பா. பொதுவி-அ)

எனவரும்.

கல்கோள் என்பது — அவ்வாறு காணப்பட்ட கல்லைக் கைக்கோடல் என்றவாறு.

உதாரணம் :

'பூவொடு நீர்தூவிப் பொங்க விரைபுகைத்து
நாவுடை நன்மணி நன்கியம்ப — மேவா
ரழன்மறங் காற்றி யவிந்தாற்கென் றேத்திக்
கழன்மறவர் கைக்கொண்டார் கல்'

(வெண்பா. பொதுவி - ௬)

எனவரும்.

நீர்ப்படை என்பது — அக் கல்லை நீர்ப்படுத்தல் என்றவாறு.

உதாரணம் :

'காடு கனலக் கனலோன் சினஞ்சொரியக்
கூடிய வெம்மை குளிர்கொள்ளப் — பாடி
நயத்தக மண்ணி நறுவிரைகொண் டாட்டிக்
கயத்தகத் துய்த்திட்டார் கல்'(வெண்பா. பொதுவி - ௧0)

எனவரும்.

நடுதல் என்பது — அக் கல்லை நடுதல் என்றவாறு.

உதாரணம் :

'மாலை துயல மணியெறிந்து மட்டுகுத்துப்
பீலி யணிந்து பெயர்பொறித்து — வேலமரு
ளாண்டக நின்ற வமர்வெய்யோற் காகென்று
காண்டக நாட்டினர் கல்' (வெண்பா. பொதுவி - ௧௨)

எனவரும்.

சீர்த்தகு மரபிற் பெரும்படை என்பது — மிகவும் தக்க மரபினையுடைய பெரும்படை என்றவாறு.

அஃதாவது நாட்டிய கல்லிற்குக் கோட்டஞ் செய்தல். அஃது * 'இற்கொண்டு புகுதல்' என உரைத்த துறை.

உதாரணம்:

'வாட்புகா வூட்டி வடிமணி நின்றியம்பக்
கோட்புலி யன்ன குரிசில்க — லாட்கடிந்து
விற்கொண்ட வென்றி விறன்மறவ ரெல்லோரு
மிற்கொண்டு புக்கா ரியைந்து'(வெண்பா. பொதுவி-கச.)

எனவரும்.

வாழ்த்தல் என்பது — அக் கல்லைப் பழிச்சுதல் என்றவாறு.

உதாரணம்:

'அடும்புகழ் பாடி யழுதழுது நோனு
திடும்பையுள் வைகிற் றிருந்த — கடும்பொடு
கைவண் குரிசில்கற் கைதொழுஉச் செல்பாண
தெய்வமாய் நின்ருன் றிசைக்கு'

எனவரும். (வெண்பா. பொதுவி - கரு)

இவையெல்லாம் கரந்தைக்கு உரித்தாக ஓதப்பட்டனவேனும்,

'ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப' (பொருளி - உஅ)

என்றதனுன் மறத்துறை ஏழிற்குங் கொள்ளப் படும். ஈண்டு ஓதப்பட்ட இருபத்தொரு துறையினும் நிரைமீட்

* இற்கொண்டு புகுதல் —
'வேத்தமருள் விளிந்தோன் கல்லென,
வேத்தினர் துவன்றி யிற்கொண்டு புக்கன்று'
(வெண்பா. பொதுவியல் - கச)

டற் பொருண்மைத்தாகிக் கரந்தை என ஓதப்பட்டன ஏழாயின. கரந்தையாயினவாறு என்னை யெனின், வெறியாட்டும், வள்ளிக் கூத்தும் மலைசார்ந்த இடத்து வழங்குதலின் வந்த நிலத்திற்குரிய பொருளாகி வந்தன ; பூவை நிலையும் அந் நிலத்தைச் சார்ந்து வருவதோர் தெய்வமாதலின் அந் நிலத்திற் கருப்பொருளாகி வந்தது ; கற்கோணிலை ஆறும், உன்ன நிலையும், முடியுடை வேந்தர் சூடும் பூவும், கழனிலையும் ஏனையவற்றிற்கும் பொதுவாகலின் எடுத்துக்கொண்டகண்ணே கூறுதல் இலக்கணமாதலின் ஈண்டு ஓதப்பட்டன என உணர்க.

பன்னிருபடலத்துள் கரந்தைக்கண் *'புண்ணொடு வருதல்' முதலாக வேறுபடச் சில துறை கூறினால் எனின், புண்படுத்தல் மாற்றோர் செய்த மறத்துறை யாகலின் அஃது இவர்க்கு மாறாகக் கூறுதல் மயங்கக் கூறுதலாம். ஏனையவும் இவ்வாறு 'மயங்கக் கூறலும்,' 'குன்றக் கூறலும்,' 'மிகைபடக் கூறலும்' ஆயவாறு எடுத்துக் காட்டின் பெருகுமாதலின் உயத்துணர்ந்து கண்டுகொள்க. இத் துணையும் கூறப்பட்டது வெட்சித்திணை. (ரு)

சுசு. வஞ்சிதானே முல்லையது புறனே
யெஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த
னஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே.

இது வஞ்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — வஞ்சியாகிய புறத்திணை முல்லையாகிய அகத்திணைக்குப் புறனாம். அஃது ஒழியாத மண்ணை நச்சுதலையுடைய வேந்தனை மற்றொரு வேந்தன் அஞ்சுதகத் தலைச் சென்று அடல் குறித்தது என்றவாறு.

---

* புண்ணொடு வருதல் — 'மண்ணொடு புகழ்நிறீஇப்
புண்ணொடு தான்வந்தன்று'
(வெண்பா. கரந்தை - ரு)

ஒழியாத மண்ணை நச்சுதலாவது வேண்டிய அரசர்க்குக் கொடாமை.

'அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்'(புறத்தி-க)

என்பதனைக் கொணர்ந்து உரைத்துக் கொள்க. இவ்வரை இனி வருகின்ற திணைக்கும் ஒக்கும். அதற்கு இது புறனாயவாறு என்னையெனின்,

'மாயோன் மேய காடுறை யுலக' (அகத்தி - ரு)

மும், கார்காலமும், முல்லைக்கு முதற்பொரு ளாதலின், பகைவயிற் சேறல் ஆகிய வஞ்சிக்கு நிழலும் நீரும் உள்ள காலம் வேண்டுதலானும், பருமரக் காடாகிய மலைசார்ந்த இடம் ஆகாமையானும், அதற்கு இது சிறந்து புறனாயது என்க. அன்னதாகல் முல்லைப் பாட்டினுள்,

'கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
விடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி' (முல்லைப் - உச - உஅ)

என்பதனானும் உணர்க. (சு)

சூரு. இயங்குபடை யரவ மெரிபரந் தெடுத்தல்
வயங்க லெய்திய பெருமை யானுங்
கொடுத்த லெய்திய கொடைமை யானு
மடுத்தூர்ந் தட்ட கொற்றத் தானு
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
பொருளின் றுய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
வொருவன் றாங்கிய பெருமை யானும்
பிண்ட மேய பெருஞ்சோற்று நிலையும்

வென்றோர் விளக்கமுந் தோற்றோர் தேய்வுங்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையு
மழிபடை தட்டோர் தழிஞ்சியோடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பிற் றுறைபதின்மூன்றே,

இது வஞ்சித்திணைக்கு உரிய துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — இயங்குபடை யரவம் முதலாகத் தழிஞ்சியொடு கூடச் சொல்லப்பட்ட பதின்மூன்றும் வஞ்சித்துறையாம் என்றவாறு.

'பெருமையானும்' என்பது முதலாக வந்த 'ஆன்' எல்லாம் இடைச்சொல்லாகி வந்தன. 'இயங்கு படை யரவம்' 'எரிபரந்தெடுத்தல்' என்பவற்றுக்கண் உம்மை தொக்கு நின்றன.

இயங்கு படை அரவம் என்பது — படை யெழும் அரவமும் என்றவாறு.

உ.தாரணம் :

'சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு
மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
விருகுடை பின்பட வோங்கிய வொருகுடை
யுருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே
நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே
போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேஎய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்

வெண்டலைப் புணரியின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென் றலம்வந்து
நெஞ்சநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே' (புறம் - ௩௧)

எனவரும்.

எரி பரந்து எடுத்தல் என்பது — பகைவரது நாடு எரி பரந்து கிளர்தலும் என்றவாறு.

உதாரணம் :

'வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச்சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
யெல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கஞ்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட விறுக்கும் வரம்பி றானைத்
துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர்சாந்தின்
முருகற் சீற்றத் துருகெழு குரிசின்
மயங்குவள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
வேம நன்னா டொள்ளெரி யூட்டினை
நாம நல்லமர் செய்ய
வோராங்கு மலைந்தன பெருமநின் களிறே' (புறம் - ௧௬)

எனவரும்.

வயங்கல் எய்திய பெருமையானும் என்பது — விளக்கம் எய்திய பெருமையும் என்றவாறு.

உதாரணம் :

'இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்துப்
பணிந்துகுறை மொழிவ தல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே'　(பதிற்றுப்பத்து)

எனவரும்.

'உருமுடன்று சிலைத்தலின் விசும்பதிர்ந் தாங்கு
கண்ணதிர்பு முழங்குங் கடுங்குரன் முரசங்
கால்கிளர்ந் தன்ன வூர்திக் கான்முளை
யெரிநிகழ்ந் தன்ன சிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடன் முந்நீர்
நீர்த்துணை யன்ன செலவி
னிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே'
(பதிற்றுப்பத்து)

என்ற மேற்பாட்டின் தொடர்பும் அது.

கொடுத்தல் எய்திய கொடைமையானும் என்பது — கொடுத்தலைப் பொருந்திய கொடைமையும் என்றவாறு.

உதாரணம் :

'பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவு
மறனோ மற்றிது விறன்மாண் குடுமி
யின்னா வாகப் பிறர்மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே'　(புறம் - கஉ)

எனவரும்.

அடுத்து ஊர்ந்து அட்ட கொற்றத்தானும் என்பது— பகைவர் பலரையும் அடுத்து மேலிட்டுக் கொன்ற கொற்றமும் என்றவாறு.

உதாரணம் :

'திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்
டோடன் மரீஇய பீடின் மன்னர்

நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீதுமருங் கறுமா
ரறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்
தண்ணல் யானை யடுகளத் தொழிய
வருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே' (புறம் - ௯௩.)

எனவரும்.

மாராயம் பெற்ற நெடுமொழியானும் என்பது — மாராயமாகிய உவகை பெற்ற நெடிய மொழியின்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:

'துடியெறியும் புலைய
வெறிகோல் கொள்ளு மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
பொலம்புனை யோடை யண்ணல் யானை
யிலங்குவாண் மருப்பி னுதிமடுத் தூன்றினு
மோடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளுந்
தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் மன்ணா நன்று
முயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
யிம்பர் நின்றுங் காண்டிரோ வரவே' (புறம் - ௨௮௭)

எனவரும்.

பொருளின்று உய்த்த பேராண் பக்கமும் என்பது— பகைவரைப் பொருளாக மதியாது செலுத்தின பேராண் பக்கமும் என்றவாறு.

உதாரணம் :

'ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறூஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்று
மெங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடியோ
னன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே' (புறம் - க)

எனவரும்,

வருவிசைப் புனலைக் கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமையானும் என்பது — விசை கொண்டு வரும் புனலைக் கற்சிறை தாங்கினாற்போல ஒருவன் தாங்கிய பெருமையும் என்றவாறு.

உதாரணம் :

'வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற
வாடன் முதியோள் வயிற்றிடங் — கூடார்
பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா
விரும்புலி சேர்ந்த விடம்' (வெண்பா. வஞ்சி - கக)

எனவரும்.

'வேந்துடைத் தானை முனைகெட நெரிதலி
னேந்துவாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்

புரவிற் காற்றுச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வன்மை யோனே' (புறம் - ௩௩0)

என்பதும் அது.

பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும் என்பது — திரட்சி பொருந்தின பெருஞ்சோற்று நிலையும் என்றவாறு.

உதாரணம் :

'இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடை பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளு
மல்குறு கான லோங்குமண லடைகரை
தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல
விலங்குநீர் முத்தமொடு வார்துகி ரெடுக்குந்
தண்கடற் படப்பை மென்பா லனவுங்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்குங்
குன்றுதலை மணந்த புன்புல வைப்புங்
கால மன்றியும் கரும்பறுத் தொழியா
தரிகா லவித்துப் பல்பூ விழவிற்
றேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாய
முழ்விமிழ் மூதூர் விழவுக்காணூஉப் பெயருஞ்
செழும்பல் வைப்பிற் பழனப் பாலு
மேன லுழவர் வரகுமீ திட்ட
கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி
யரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்

டொண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்
பணிகெழு வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
கடலவுங் காட்டவு மரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்
தருந்திறன் மரபிற் கடவுட் பேணிய
ருயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டங்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி
யெறும்பு மூசா விறும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார
வோடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
பெருஞ்சமந் ததைந்த செருப்புகன் மறவ
ருருமுநில னதிர்க்குங் குரலொடு கொளைபுணர்ந்து
பெருஞ்சோ றுகுத்தற் கெறியுங்
கடுஞ்சின வேந்தநின் றழங்குகுரன் முரசே'

எனவரும். (பதிற்று - ௩௦)

வென்றோர் விளக்கமும் என்பது — வென்றோர் மாட்டுளதாகிய விளக்கமும் என்றவாறு.

உதாரணம் :

'அறாஅ யாண ரகன்கட் செறுவி
னருவி யாம்ப னெய்தலோ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லி
னம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சுஞ்
செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாரி
னலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே
யூரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த், தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுகே ணகழிய குறுந்தாண் ஞாயி

லாரெயிற் ருேட்டி வெளவினை யேருெடு
கன்றுடை யாயந் தரீஇப் புகல்சிறந்து
புலவுவில் லிளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி றுடா வைகற்பொழுது நினையூஉ
வான்பயம் வாழ்நர் கழுவுடலை மடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு வற்றென
வருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையோ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூரா வணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் னூழி
யுரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி
யறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே' (பதிற்று - எக)

எனவரும்.

தோற்றூர் தேய்வும் என்பது — தோற்றோர் தேய்வு கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'வாஅன்மருப்பிற் களிற்றியானை
மாஅமலையிற் கணங்கொண்டவ
ரெடுத்தெறிந்த விறன்முரசங்
கார்மழையிற் கடிதுமுழங்கச்
சாந்துபுலர்ந்த வியன்மார்பிற்
றொடிசுடர்வரும் வலிமுன்கைப்
புண்ணுடை யெறுழ்த்தோட் புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வா
ளொடிவி றெவ்வ ரெதிர்நின் றுரைஇ
யிடுக திறையே புரவெதிர்ந் தோற்கென
வம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
வனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி

புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே' (பதிற்று-அ0)

எனவரும்.

குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளையும் என்பது — குறைவுறுதலைச் செய்யாத வென்றிச் சிறப்பினாலாய கொற்றவள்ளையும் என்றவாறு.

கொற்றவள்ளை — தோற்ற கொற்றவன் கொடுக்குந் திறை. உதாரணம் வந்துழிக் காண்க.

அழிபடை தட்டோர் தழிஞ்சி என்பது—மாற்றார்விடு படைக்கலன் முதலியவற்றைத் தம்மாட்டுத் தடுத்து உளன் அழிந்தோர்ப் பேணித் தழுவிக்கோடல் என்றவாறு.

உதாரணம் :

'வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூட்டிக் காலிற்
றமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
வொருகை யிரும்பிணத் தெயிறு மிறையாகத்
திரிந்த வாய்வா டிருத்தாத்
தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே' (புறம் - உஅச)

எனவரும்.

ஒடு-எண். இத்துணையும் கூறப்பட்டது வஞ்சி என்க.

'உரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி
யறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே' (பதிற்று - எக)

என்பதும் இதன்கண் அடங்கும். இது * முதுமொழி வஞ்சி' என்ப.

---

* முதுமொழி வஞ்சி — 'தொன்மரபின் வாட்குடியின்
முன்னோரது நிலைகிளந்தன்று'
(வெண்பா. வஞ்சி - கந)

தொகைஇக் கழிபெருஞ் சிறப்பிற் பதின்மூன்று துறைத்து என்பது — இத்துணையுந் தொகுத்து எண்ணின் கழிபெருஞ் சிறப்பிற் பதின்மூன்று துறைத்தாம் என்றவாறு.

'கழி' என்றது 'வென்றோர் விளக்கம்' முதலியன மூன்றும் ஒழிந்த ஏனைய இருதிறத்தினர்க்கும் ஏற்றலை என்க. இஃது அறிந்து 'கழிபெருஞ் சிறப்பிற் பதின்மூன்று' எனக்கூறினர். இன்னும் 'கழிபெருஞ் சிறப்பின்' என்றமையால், பேரரசர் துணையாக வந்த குறுநில மன்னரும் தாமும் பொலிவெய்திப் பாசறை நிலை யுரைத்தலும் பிறவும் கொள்க.

இவை பற்றியன துணைவஞ்சியாம்.

'நீயே, புறவி னல்லல்' (புறம் - ௪௬)
'வள்ளியோர்ப் படர்ந்து' (புறம் - ௪௭)

என்னும் புறப்பாட்டுக்களில் காண்க. பிறவும் அன்ன. (௭)

௬௬. உழிஞை தானே மருதத்துப் புறனே
முழுமுத லரண முற்றலுங் கோடலும்
பன்னெறி மரபிற் றாகு மென்ப.

இஃது உழிஞைத்திணை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — உழிஞை என்னும் புறத்திணை மருதம் என்னும் அகத்திணைக்குப் புறனும். அது முழுமுதல் அரண் முற்றுதலும் அழித்தலுமாய் வருந்தன்மைத் தாகிய பல நெறியை மரபாக உடைத்தாகும் என்ப புலவர் என்றவாறு.

'முதலரணம்' என்றமையால், அரணம், தலையும் இடையும் கடையும் என மூவகைப்படும். அவற்றுள் தலை

யரண் என்க. அஃதாவது, அரணிற்குக் கூறுகின்ற இலக்கணம் பலவும் * உடைத்தாதல். மருதத்திற்கு இது புறனாயவாறு என்னையெனின், வஞ்சியிற் சென்ற வேந்தனொடு போர்செய்த லாற்றாது † உடைந்த மாற்று வேந்தன் ‡ அரண்வழியாகப் போர்செய்யுமாதலானும், அஃது அவர் நாட்டகத்தாகலானும், அவ்வழிப் பொருவார்க்கு விடியற்பொழுது காலமாகலானும் அதற்கு அது புறனாயிற்றென்க. நாட்டெல்லையினை $ அழிப்பு உழிஞையாகுமோ எனின், அது பெரிதாயின் அதன் பாற்படும்; சிறிதாயின் வெட்சியுள் ஓதின 'ஊர்கொலை' (புறத்திணை - ௩) யுள் அடங்கும் என்க. (௮)

**௬௭. அதுவே தானு மிருநால் வகைத்தே.**

இஃது உழிஞைத் திணையை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — அவ் வுழிஞைத் துறைதான் எட்டு வகைத்து என்றவாறு. அவையாமாறு முன்னர்க் காணப்படும். (௯)

**௬௮. கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமு**
**முள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்புந்**
**தொல்லெயிற் றிவர்தலுந் தோலது பெருக்கமு**
**மகத்தோன் செல்வமு மன்றியு முரணிய**
**புறத்தோ னணங்கிய பக்கமுந் திறற்பட**
**வொருதான் மண்டிய குறுமையு முடன்றோர்**

---

* 'முற்றி உடைத்தாதல்'
† 'உடைந்து'
‡ 'அரண்வலியாகப்'
$ 'நாட்டெல்லையின் அழிப்பார் உழிஞைய ராகாரோ வெனின்'
} எனவும் பிரதிபேதம்.

வருபடை பேணு ராரெயி லுளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே.

இது மேற்கூறப்பட்ட உழிஞைத்துறை எட்டு என்ற தன் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — 'கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்' என்பது முதலாகச் சொல்லப்பட்டன உழிஞைத்துறையாம் என்றவாறு.

பதினெட்டு, * இருபத்தொன்பது என்பார் மதம் விலக்கியமை தோன்றப் பெயர்த்தும் தொகைகூறினார். கூறியது கூறல் அன்று; இது தொகை.

கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும் என்பது — பகைவரது தேயத்தைக் கொள்ளக் குறித்த கொற்றம் கூறுதலும் என்றவாறு.

கொள்ளார் — சிறு சொல்லாடிய பிறரும், தன்னை இறையெனக் கொள்ளாரும்.

உதாரணம் :

'ஆறு வீகை யடுபோ ரண்ணனின்
யானையும் மலையிற் றோன்றும் பெருமநின்
றானையுங் கடலி னொலிக்கும் வைந்நுதி
வேலு மின்னின் விளங்கு முலகத்
தரசுதலை பனிக்கு மாற்றலை யாதலிற்
புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே
றண்புனற் பூச லல்லது நொந்து
களைக வாழி வளவ வென்றுநின்
முனைதரு பூசல் கனவினு மறியாது
புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோ னீபுறங் காப்பப்
பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்

* 'இருபத்தொன்பது' என்பர் வெண்பாமாலை யுடையாரும். (உழிஞை • க)

கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
மலையி னிழிந்து மாக்கட னோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லா நின்னோக் கினரே
நீயே,
மருந்தில் கணிச்சி வருந்தவட் டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே' (புறம் - சஉ)

எனவரும்.

உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும் என்பது —நினைத்தது முடிக்கலாகும் வேந்தனது இயற்சிறப்புக் கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'அடுநை யாயினும் விடுநை யாயினு
நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
தண்ணான் பொருநை வெண்மணற் சிதையக்
கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங்
கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
வாங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே'

(புறம் - ந௬)

எனவரும். இன்னும் 'உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்' என்றதனால் * அகத்தரசற்கு அழிந்து கூறலுங் கொள்க.

உதாரணம் :

'இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த வொற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்
தலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவு மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் வினைகூஉக் கேட்பவு
மின்னா தம்ம வீண்டினி திருத்த
றுன்னருந் துப்பின் வயமான் றோன்ற
லறவை யாயி னினதெனத் திறத்தன்
மறவை யாயிற் போரொடு திறத்த
லறவியு மறவியு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவி
னீண்மதி லொருசிறை யொடுங்குத
லுணுத்தக வுடைத்திது காணுங் காலே' (புறம் - சச)

எனவரும்.

தொல் எயிற்று இவர்தலும் என்பது — தொல்லெயி லின்கட் பரத்தல் கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'புல்லார் புகலொடு போக்கொழியப் பொங்கினனாய்ப்
பல்லார் மருளப் படைபரப்பி — யொல்லார்
நிறத்திறுத்த வாட்டானை நேரார் மதிலின்
புறத்திறுத்தான் பூங்கழலி னான்' (வெண்பா. உழி - கo)

எனவரும்.

* 'அகத்தரசனை யழிந்து கூறலும்' எனவும் பாடம்.

தோலது பெருக்கமும் என்பது — தோற்படையினது பெருமை கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி
யின்றுநாம் வைக விழிவாகும் — வென்றொளிரும்
பாண்டி னிரைதோற் பணியார் பகையரணம்
வேண்டி லெளிதென்றான் வேந்து' (வெண்பா. உழி-கஉ)

எனவரும்.

அகத்தோன் செல்வமும் என்பது — அகத்தரசனது செல்வங் கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொண் முரசின் மூவிரு முற்றினு
முழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே,
சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே
இரண்டே,
தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே
மூன்றே,
கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே
நான்கே,
அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினுந்
தாளிற் கொள்ளலிர் வாளிற் றரலன்
யானறி குவனது கொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
வாடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே' (புறம். - க0க)

எனவரும்.

அன்றியும் முரணிய புறத்தோன் அணங்கிய பக்கமும் என்பது — முற்கூறியதல்லாமலும் மாறுபட்ட புறத்தரசன் வருந்திய பக்கங் கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'நஞ்சுடை வாலெயிற் றைந்தலை சுமந்த
வேக வெந்திற னாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத் துருமெறிந் தாங்குப்
புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
யிடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்
செம்புறழ் புரிசைச் செம்மன் மூதூர்
வம்பணி யானை வேந்தகத் துண்மையி
னல்லவென் னாது சிதைத்தல்
வல்லையா னெடுந்தகை செருவத் தானே' (புறம் - ௩௭)

எனவரும்.

திறல்பட ஒருதான் மண்டிய குறுமையும் என்பது — வலிபட ஒருதானாகிச் சென்ற குற்றுழிஞை கூறுதலும் என்றவாறு.

உதாரணம் :

'கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பி னொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவவன் கண்ணிதார் பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே வயின்வயி

னுடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை
யழுந்தப் பற்றி யகல்விசும் பரர்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே' (புறம்-எஎ)

எனவரும்.

உடன்றோர் வரு படை பேணார் ஆர் எயில் என்பது—* வெகுண்டோரது வருகின்ற படையைப் பேணாராகி அமைந்த எயில் உழிஞை கூறுதலும் என்றவாறு.

உதாரணம்:

'மயிற்கணத் தன்னார் மகிழ்த்தேற லூட்டக்
கயிற்கழலாற் கண்கனல் பூப்ப—வெயிற்கண்ணார்
வீயப்போர் செய்தாலும் வென்றி யரிதரோ
மாயப்போர் மன்னன் மதில்' (வெண்பா. உழி - கக)

எனவரும்.

இவை உளப்படச் சொல்லப்பட்ட நாலிருவகைத்து உழிஞை எனக் கூட்டி முடிக்க. (கO)

சுக. குடையும் வாளு நாள்கோ ளன்றிய
மடையமை யேணிமிசை மயக்கமுங் கடைஇச்
சுற்றம ரொழிய வென்றுகைக் கொண்டு
முற்றிய முதிர்வு மன்றி முற்றிய
வகத்தோன் வீழ்ந்த நொச்சியு மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானு
நீர்ச்செரு வீழ்ந்த பாசியு மதாஅன்
றூர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனு
மதின்மிசைக் கிவர்ந்த மேலோர் பக்கமு
மிகன்மதிற் குடுமிகொண்ட மண்ணு மங்கலமும்

* 'வெகுண்டு வருகின்ற படையைப் பேணார் வாரெயி லுழிஞை' எனவும் பாடம்.

**வென்ற வாளின் மண்ணோ டொன்றத்**
**தொகைநிலை யென்னுந் துறையொடு தொகைஇ**
**வகைநான் மூன்றே துறையென மொழிப.**

இதுவும் உழிஞைப் பகுதியே கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் — குடை நாள் கோள் முதலாகச் சொல்லப்பட்ட பன்னிரண்டு துறையும் உழிஞைக்கு உரிய துறை என்றவாறு

எனவே மேற்சொல்லப்பட்டவற்றின் விரியும் பன்னிரண்டு உண்டு என்றவாறும்.

குடையும் வாளும் நாள் கோள் என்பது — குடை நாட்கோள் வாள்நாட்கோள் என வருவனவும் என்றவாறு.

உதாரணம் :

'நெய்யணிக செவ்வே னெடுந்தேர் நிலைபுகுக
கொய்யுளைமா கொல்களிறு பண்விடுக — வையகத்து
முற்றக் கடியரண மெல்லா முரணவிந்த
கொற்றக் குடைநாட் கொள' (வெண்பா. உழி - உ)

எனவரும். இது குடைநாட்கோள்.

'வாணாட் கொளலும் வழிமொழிந்து வந்தடையாப்
பேணார் பிறைதொடும் பேமதிற் — பூணா
ரணிகொள் வனமுலையா ராடரங்க மேறிப்
பிணிகொள்பே யாடும் பெயர்த்து' (வெண்பா. உழி-ங)

எனவரும். இது வாணாட்கோள்.

அன்றியும் மடை அமை ஏணி மிசை மயக்கமும் என்பது — அல்லாமலும் மதிலிடத்து மடுத்தல் அமைந்த ஏணி சார்த்தி அதன்மேல் பொரும் போர் மயக்கமும் என்றவாறு.

உதாரணம் :

'சுடுமண் மெடுமதில் சுற்றிப் பிரியார்
கடுமுரண் மன்னர் கழிய — வடுமுரா
ஞறிஞ ரன்றி யரவு முடும்பும்போ
லேறிஞ ரேணி பலர்' (வெண்பா. உழி. கக)

எனவரும்.

'அன்றியும்' என்றதனான் ஏணி சார்த்தலன்றி உடும்பு உய்த்துப் பற்றி யேறிப் பொருதலும் கொள்ளப்படும்.

உதாரணம் :

'மையணற் காளை வலன்றரிய' (சிற்றடக்கம்)

என்னுஞ் சிற்றடக்கத்துக் குறிஞ்சியில் பெருமாட்டி நோக்கினை

'மிசையெயி லூட்டிய வுடும்புறழ் நோக்கினை
நசைஇய வுள்ளம் வழிப்படக் கடைஇ'

என வருதல் காண்க.

கடைஇச் சுற்று அமர் ஒழிய வென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வும் என்பது — செலுத்திச் சுற்றமர் ஒழிய வென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வும் என்றவாறு.

உதாரணம் :

'காலை முரச மதிலியம்பக் கண்கனன்று
வேலை விறல்வெய்யோ னேக்குதலு — மாலை,
யடுகை மடிசிலென் றம்மதிலு ளிட்டார்
தொடுகழலார் மூழை துடுப்பு' (வெண்பா. உழி. உ௩)

எனவரும்.

அன்றி முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் என்பது — அஃது 'அல்லாமல் முற்றவகப்பட்ட அகத்திலுள்ளான் வீழ்ந்த நொச்சியும் என்றவாறு.

உதாரணம் :

'நீரற வறியா நிலமுதற் கலந்த
கருங்குர னொச்சிக் கண்ணார் குவவுத்தழை
மெல்லிழை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
வெருவரு குருதியொடு மயங்கி யுருக்கரந்
தெற்றுவாய்ப் பட்ட தெரிய லூரன்
செத்துப் பருந்துண் டெப்பயாங் கண்டன
மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே' (புறம் - உஎக)

எனவரும்.

மற்றதன் புறத்தோன் வீழ்ந்த புதுமையானும் என்பது — அந் நொச்சியின் புறத்ததாகிய உழிஞையிணை யுடையோன் வீழ்ந்த புதுமையும் என்றவாறு.

உதாரணம் :

'கோடுயர் வெற்பி னிலங்கண் டிரைகருதுந்
தோடுகொள் புள்ளின் றொகையேய்ப்பக் — கூடார்
முரணகத்துப் பாற முழவுத்தோண் மள்ள
ரரணகத்துப் பாய்ந்திழிந்தா ரார்த்து'
(வெண்பா. உழி - உO)

எனவரும்.

நீர்ச்செரு வீழ்ந்த பாசியும் என்பது — கிடங்கின் உளதாகிய போரின்கண்ணே வீழ்ந்த பாசியும் என்றவாறு.

உதாரணம் :

'நாவாயுந் தோணியு மேல்கொண்டு நள்ளாதா
ரோவார் விலங்கி யுடலவும் — பூவா
ரகழி பரந்தொழுகு மங்குருதிச் சேற்றுப்
பகழிவாய் வீழ்ந்தார் பலர்' (வெண்பா. உழி - கஎ)

எனவரும்.

அதான்று ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும் என்பது — அஃதொழிய ஊர்ச் செருவின்கண் வீழ்ந்த அப்பாசி மறனும் என்றவாறு.

உதாரணம் :

'பாயினும் மாயும் வகையாற் பலகாப்பு
மேயினு ரேய விகன்மறவ — ராயினு
ரொன்றி யவரற ஆர்ப்புலத்துத் தார்தாங்கி
வென்றி யமரர் விருந்து' (வெண்பா. நொச்சி - உ)

எனவரும்.

மதில் மிசைக்கு இவர்ந்த மேலோர் பக்கமும் என்பது — மதில் மேற்கோடற்குப் பரந்த மதிலோர் பக்கமும் என்றவாறு.

உதாரணம் :

'அகத்தன வார்கழ லேனென்று ளரணின்
புறத்தன போரெழிற் றிண்டோ — ளுறத்தழீஇத்
தோட்குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான்' (வெண்பா. நொச்சி - எ)

எனவரும்.

இகல் மதில் குடுமி கொண்ட மண்ணுமங்கலமும் என்பது — சம்முடன் இகலி மதில்மேல் நின்றானை அட்டு அவன் முடிக்கலம் கொண்ட மண்ணு மங்கலமும் என்றவாறு.

உதாரணம் :

'எங்கண் மலர வெயிற்குமரி கூடிய
மங்கல நாள்யா மகிழ்தூங்கக் — கொங்கலர்தார்ச்
செய்சுடர்ப்பூண் மன்னவன் சேவடிக்கீழ் வைகினவே
மொய்சுடர்ப்பூண் மன்னர் முடி'

எனவரும். (வெண்பா. உழிஞை - உ௪)

வென்ற வாளின் மண்ணோடு ஒன்ற என்பது — வென்றவாளின் மண்ணு மங்கலத்துடன் பொருந்த என்றவாறு.

உதாரணம் :

> 'தீர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்
> கூர்த்தவாண் மண்ணிக் கொடித்தேரான் — போர்த்து
> மிடியார் பணைதுவைப்ப விம்மதிலுள் வேட்டான்
> புடையா ரறையப் புகழ்' (வெண்பா. உழிஞை - உஎ)

எனவரும்.

தொகைநிலை என்பது — * அகமதில் அழித்தமை யான் மற்றுள்ள † சார்வு மதில் வரைப்பில் மாறுபட்ட வேந்தரும் முரண் அவிந்தபடி யடைதல் என்றவாறு.

உதாரணம் :

> 'வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்தவர்
> வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப
> நல்கினை யாகுமதி யெம்மென் றருளிக்
> கல்பிறங்கு வைப்பிற் கடறரை யாத்தநின்
> றொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்
> செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கு
> மெந்திரத் தகைப்பி னம்புடை வாயிற்
> கோள்வன் முதலைய குண்டுகண் ணகழி
> வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை
> யொன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
> நின்னிற் றந்த மன்னெயி லல்லது
> முன்னும் பின்னுநின் முன்னோ ரோம்பிய
> வெயின்முகப் படுத்தல் யாவது வளையினும்
> பிறிதாறு சென்மதி சினங்கெழு குரிசி
> லெழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக்
> குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணிற்
> றேம்பாய் கடாஅத்தொடு காழ்கை நீவி
> வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுத
> லேந்துகை சுருட்டித் தோட்டி நீவி

* 'அம்மதி லழித்தமையான்' எனவும் பாடம்.

† 'மற்றுள்ள மதில்கள் வரைப்பின் மாறுபட்ட' எனவும் பாடம்.

மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா வாங்குநின் களிறே' (பதிற்றுப். ருங)

எனவரும்.

என்னுந் துறையொடு தொகைஇ உழிஞை வகை நான்மூன்றே துறை என மொழிப புலவர் என்று கூட்டி முடிக்க. (௰க)

**எ0. தும்பை தானே நெய்தலது புறனே
மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்று தலையழிக்குஞ் சிறப்பிற் றென்ப.**

இது தும்பைத் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — தும்பை என்னும் புறத்திணை நெய்தல் என்னும் அகத் திணைக்குப் புறனாம். அது வலிமை பொருளாகப் போர் கருதிவந்த அரசன்கட் சென்று அவனைத் தலைமை அழிக்கும் சிறப்பினை யுடைத்து என்ப என்றவாறு.

இதனானே,

'எதிரூன்றல் காஞ்சி' (பிங்க. அநுபோக - ருஎரு)

என்பாரை மறுத்தவாறு அறிக. அதற்கு இது புறனாய வாறு என்னையெனின், இருபெரு வேந்தரும் ஒருகளத்துப் பொருதலின் அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களரும் மணலும் பரந்த வெளிநிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல் சார்ந்த வழியல்லது இன்மையானும், நெய்தற்கு ஓதிய எற்பாடு போர்த் தொழிற்கு * முடிவாதலானும், நெய்தற்குப் புறனாயிற்று என்க. (௰உ)

* 'முடியாதலானும்' எனவும் பாடம்.

௭க. கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற வுயிரி னின்ற யாக்கை
யிருநிலந் தீண்டா வருநிலை வகையோ
டிருபாற் பட்ட வொருசிறப் பின்றே.

இது தும்பைத் திணையின் சிறப்பியல் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்—இது மேலனபோல ஒருபாற்கு மிகுதலின்றி இருவகையினர்க்கும் ஒத்த சிறப்பின்பாற் பட்டதாம். ஒருவர்மாட்டு மிகுதல் இல்லை சென்ற உயிரின் நின்ற யாக்கை என்றவாறு.

கணையும் வேலும் படைத்துணையாகக் கொண்டு பொருதலின் காரணமாக நின்ற யாக்கை என ஒட்டி உரைக்க. இருநிலந் தீண்டா வருநிலை வகையாவது — நீர் அட்டை காலவயப்பட்டு உடலினின்று உயிர் பிரிக்கப் படுமாறு இருபாற் படுக்கப்படும் அற்ற துண்டம் இணைதல் போன்று ஆடல் ஒத்த பண்பினை யுடையது இப் பகுதி என்க. இக் கருத்து ஒட்டிச், சொற்கு ஏற்ற பொருள் பெய்து உரைக்க. மேல் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும். (௰௩)

௭௨. தானை யானை குதிரை யென்ற
நோனா ருட்கு மூவகை நிலையும்
வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி யொருவன்
றான்மீண் டெறிந்த தார்நிலை யன்றியு
மிருவர் தலைவர் தபுதிப் பக்கமு
மொருவ னொருவனை யுடைபடை புக்குக்
கூழை தாங்கிய *வேருமையும் †படையறுத்துப்

* 'பெருமையும்' எனவும் பாடம்.
† 'படை மறுத்துப்' எனவும் பாடம்.

பாழி கொள்ளு மேமத் தானுங்
களிற்றெறிந் தெதிர்ந்தோர் பாடுங் களிற்றொடு
பட்ட வேந்தனை யட்ட வேந்தன்
வாளோ ராடு மமலையும் வாள்வாய்த்
திருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமு
மொருவரு மொழியாத் தொகைநிலைக் கண்ணுஞ்
செருவகத் திறைவன் வீழ்வுறச் சினைஇய
வொருவன் மண்டிய நல்லிசை நிலையும்
பல்படை யொருவற் குடைதலின் மற்றவ
னொள்வாள் வீசிய நூழிலு முளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே.

இது தும்பைத் திணைக்கு உரிய துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — தானைநிலை முதலாக நூழில் ஈறுகப் பன்னிரண்டு துறையினை உடைத்து தும்பைத் திணை என்றவாறு.

தானை யானை குதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும் என்பது — பகைவர் உட்கப்படுகின்ற தானையும் யானையும் குதிரையுமாகிய மூவகைப்பட்டவற்றின் நிலையும் என்றவாறு.

அவற்றுள் தானைநிலை :

'வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
கண்கூ டிறுத்த கடன்மருள் பாசறைக்
குமரிப்படை தழீஇக் கூற்றுவினை யாடவர்
தமர்பிற ரறியா வமர்மயங் கழுவத்
திறையும் பெயருந் தோற்றி னுமரு
ளுண்முறை தபுத்தீர் வம்மி னீங்கெனப்
போர்மலைந் தொரு சிறப யாவரு

மரவுமிழ் மணியிற் குறுகார்
நிரைகாழ் மாலையெங் கேள்வனைப் பிறரே'
(புறம் - உகச)

எனவரும்.

'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்' (திருக்குறள். படைச்செ - ச)

என்பதும் அது.

'நறுவிரை துறந்த நரைவெண் கூந்த
லிரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்கு நோயெல்லாந் தானா யினனே' (புறம் - உஎசு)

என வருவதும் இதன்பாற் படும்.

'தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற்
கொற்கத் துதவினா னாகுமாற் பிற்பிற்
பலர்புகழ் செம்ம லுடைத்தாற் பலர்தொழ
வானுறை வாழ்க்கையு மீயுமா லன்னதோர்
மேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ
தானேயும் போகு முயிர்க்கு'

என்பது ஒரு வீரன் கூற்று இதன்பாற் படும்.

யானைநிலை யாவது — யானையின்நிலை கூறுதல் என்றவாறு.

உதாரணம் :

'கையது கையொ டொருதுணி கோட்டது
மொய்யிலைவேன் மன்னர் முடித்தலை — பைய
வுயர்பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங்கோன்
வயவெம்போர் மாறன் களிறு'

எனவரும்.

குதிரைநிலை யாவது — குதிரையின்நிலை கூறுதல் என்றவாறு.

உதாரணம் :

'நிலம்பிறக் கிடுவது போற்குளம்பு கடைஇ
வுள்ள மொழிக்குங் கொட்பின் மான்மே
லெள்ளுநர்ச் செகுக்குங் காளை கூர்த்த
நெடுவே லெஃகு நெஞ்சுவடு விளைப்ப
வாட்டிக் காணிய வருமே நெருநை
யுரைசால் சிறப்பின் வேந்தன் முன்னர்க்
கரைபொரு முந்நீர்த் திரையிற் போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப
விடுமருப் பியானை யெறிந்த வெற்கே' (புறம் - ௩0௩)

எனவரும்.

வேல் மிகு வேந்தனை மொய்த்த வழி ஒருவன் தான் மீண்டு எறிந்த தார்நிலை அன்றியும் என்பது — வேலால் வென்றி மிகலையே கண்ணேக்கு உடையனுய்க் களத்து முகப்பிற் சென்ற வேந்தனை மாற்றூர் சூழ்ந்த விடத்து வேந்தன் பாலினனுய மற்றோர் தலைவன் தன் நிலைவிட்டுத் தன் வேந்துமாட்டு அடுத்துத் துணையாய் மாற்றுரை எறிந்த தார்நிலைக் கண்ணும் அஃதல்வழியும் என்றவாறு.

உதாரணம் :

'கிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
யில்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
யிறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்புசுவைக் கொண்ட விழுப்புணோய் தீர்ந்து
மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்
தீரந்தை யோனே பாண்பசிப் பகைஞ
னின்மை தீர வேண்டி னெம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல
யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
முண்ணு மருங்கு காட்டித் தன்னூர்க்

கருங்கைக் கொல்லனை யிரக்குந்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே' (புறம்-கஅ0)

எனவரும். இதனுள் பாணன் அது தோன்றப் புகழ்ந்த வாறு காண்க. பிறவும் அன்ன.

'இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்' என்பது — படை நின்று பொராநின்ற தலைவர் இருவரும் தம்முட் பொருது படுதற்கண்ணும் என்றவாறு.

தபுதல் - சாதல், அப்பக்கம் - தபுதிப்பக்கம்.

உதாரணம்:

'காய்ந்து கடுங்களிறு கண்கனலக் கைகூடி
வேந்த ரிருவரும் விண்படர — வேந்து
பொருபடை மின்னப் புறங்கொடா பொங்கி
யிருபடையு நீங்கா விகல்' (வெண்பா. தும்பை - கஉ)

எனவரும்.

'ஒருவன் ஒருவனை உடைபடைபுக்குக் கூழை தாங்கிய எருமையும்' என்பது — ஒரு வீரன், தன் கெடுபடையின்கண் புக்கு மாற்றரசன் படைவீரனைக் கூழையொடு தாங்கிய * எருமையின்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—

'கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலு
மொத்தன்று மாதோ விவற்கே செற்றிய
திணிநிலை யலறக் கூழை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
யோம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொ ளியானையிற் குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தொழிந்ததன் றோழற்கு வருமே'
(புறம் - உஎரு)

எனவரும்.

* 'பெருமையானும்' எனவும் பாடம்

படை அறுத்துப் பாழிகொள்ளும் ஏமத்தானும் என்பது — கருவியை * அறுத்து மல்லினற் கொள்ளும் ஏமத்தானும் என்றவாறு.

உதாரணம் :

'நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேறுரந் தினியே
தன்னுந் துரக்குநன் போலு மொன்னல
ரெஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி மெய்க்கொண் டனனே' (புறம்-உஎச)

எனவரும்.

களிறு எறிந்து எதிர்ந்தோர் பாடும் என்பது — களிறு எறிந்து எதிர்ந்தோர் பட்ட வழியும் என்றவாறு.

உதாரணம் :

'ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
குன்றத் தன்ன களிறொடு பட்டோன்
வம்பலன் போலத் தோன்று முதுக்காண்
வெரிநில் வரியணில் வாலத் தன்ன
கான ஊகின் கழன்றுகு முதுகூர்
விரியல் வான்குழற் சுரியற் றங்க
நீரும் புனலு மீயா துமணர்
யாருமி லொருசிறை முடத்தொடு துறந்த
† வாழா வன்பக டேய்ப்பத் தெவ்வர்ப்
பேருயிர் கொள்ளு மாதோ வதுகண்டு
வெஞ்சின யானை வேந்தனு மிக்களத்
தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
பண்கொளற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே'' (புறம் - ௩0எ)

எனவரும்.

* 'மறுத்து' எனவும் பாடம.

† 'வாழா வாள்பகடு' எனவும் பாடம்.

களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும் என்பது — களிற்றுடன் போந்து மலைந்துபட்ட இறைவனை மிக்க வேந்தன் வாட்படையாளர் நெருங்கியாடிப் பாடும் பாட்டும் என்றவாறு.

அமலல் — நெருங்கல்; அதனால் ஆயபாட்டுக்கு ஏற்புடைத்தாயிற்று.

உதாரணம் :

'விழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
திலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே' (பதிற்றுப் - ருசு)

எனவரும்.

வாள்வாய்த்து இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக்கண்ணும் என்பது — இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும் வாட்டொழின் முற்றி ஒருவரும் ஒழியாமல் பட்டவிடத்தும் என்றவாறு.

உதாரணம் :

'வருதார் தாங்கி யமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர்புண் டொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்த றீட்டி
நிறங்கிள ருருவிற் பேஎய்ப் பெண்டி
ரெடுத்தெறி யனந்தற் பறைச்சீர் தூங்கப்
பருந்தருந் துற்ற தானையொடு செருமுனிந்து
மறத்தின் மண்டிய வயப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
யுரைசால் சிறப்பின் முரசொழிந் தனவே
பன்னூ றடுக்கிய வேறுபடு பஞ்நில

மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித் தெறுவர
வுடன்வீழ்ந் தன்று லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னோரு மாற்ற
வரும்பெற லுலக நிறைய
விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே'(புறம் - சுஉ)

எனவரும்.

செரு அகத்து இறைவன் வீழ்வுறச் சினைஇய ஒருவன் மண்டிய நல் இசை நிலையும் என்பது — பொருகளத்துத் தன் வேந்தன் வீழ்ந்துபட அதுகண்டு கறுத்தெழுந்த தலைவன் — ஒரு வீரன், நெருங்கிப் பொருத வரும் நற்புகழைப் பெறும் நிலைமையின்கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'வான மிறைவன் படர்ந்தென வாடுடுப்பா
மானமே நெய்யா மறம்விறகாத் — தேனிமிருங்
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளம
ரொள்ளழலுள் வேட்டா னுயிர்'

(வெண்பா. தும்பை - உசு)

எனவரும்.

பல்படை ஒருவற்கு உடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசிய நூழிலும் என்பது — பலபடை ஒருவற்குக் கெடுதலின் மற்றவன் தன் ஒள்ளிய கைவாள் வீசிய நூழிலும் என்றவாறு.

என்றது பலரைக் கொல்லுதல். அதனைச் சொற்றலும் என்றவாறும்.

உதாரணம் :

'ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை

யின்றி னூங்கோ கேளலர் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
யொலியன் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
வொருதா னாகிப் பொருதுகளத் தடலே' (புறம் - எசு)

எனவரும்.

பல வுயிரை ஒருவன் கொன்றதனை நூழில் என்றுரைத்தல். மதுரைக்காஞ்சியுள் —

'வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலையர்
வேழப் பழனத்து நூழி லாட்டு'
(மதுரைக்கா - உருரு - உருஎ)

எனவரும் பொருள் நோக்கி யறிக.

இவை உளப்படத் தும்பைத்திணை பன்னிரு துறைத் தாய்ப் புல்லித் தோன்றும் என முடிவு கட்டுக. (மச)

எரு. வாகை தானே பாலையது புறனே
தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்த லென்ப.

இது வாகைத் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — வாகை என்னும் புறத்திணை பாலை என்னும் அகத்திணையது புறனும். அது கேடில்லாத கோட்பாட்டினை யுடைய தத்தமக்குள்ள இயல்பை வேறுபட மிகுதிப் படுத்தல் என்ப என்றவாறு.

அதற்கு இது புறனுபவாறு என்னை யெனின், பாலை யாவது தனக்கென ஒரு நிலனின்றி எல்லா நிலத்தினும் காலம்பற்றிப் பிறப்பது போன்று இதுவும் எல்லா நிலத்தினும் எல்லாக் குலத்தினும் காலம் பற்றி நிகழ்வதாதலினுனும், ஒத்தார் இருவர் புணர்ச்சியினின்றும் புகழ்ச்சி காரணமாகப் பிரியுமாறுபோலத் தன்னொடு ஒத்தாரினின்றும் நீங்கிப் புகழப்படுதலானும் அதற்கு இது புறனுயிற்று. அஃதாமாறு வருகின்ற சூத்திரங்களானும் விளங்கும். ()

எச. அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமு
மைவகை மரபி னரசர் பக்கமு
மிருமூன்று மரபி னேனோர் பக்கமு
மறுவில் செய்தி மூவகைக் காலமு
நெறியி னாற்றிய வறிவன் றேயமு
நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்
பாலறி மரபிற் பொருநர் கண்ணு
மனைநிலை வகையொ டாங்கெழு வகையாற்
றொகைநிலை பெற்ற தென்மனார் புலவர்.

இது வாகைத்திணை பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — பார்ப்பனப் பக்கம் முதலாகப் பொருநர் பக்கம் ஈறுகச் சொல்லப்பட்டனவும் அத்தன்மைத்தாகிய நிலைவகையோடு ஆங்குக் கூட ஏழ் வகையாற் றொகைநிலை பெற்றதென்ப வாகைத்திணை என்றவாறு.

எனவே தொகைநிலை பல என்பது பெறுதும்.

அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்பது — ஆறு திறனுகிய அந்தணர் பக்கமும் என்றவாறு.

அறுவகைப் பட்ட பக்கம் எனக் கூட்டுக. அவை யாவன — ஓதல் - ஓதுவித்தல், வேட்டல் - வேட்பித்தல், ஈதல் - ஏற்றல் என்பன.

என்னை? சான்றோர்,

‘ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்த
லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு
மறம்புரி யந்தணர்’ (பதிற்று - உச)

என ஓதினமையின்.

இவ்வொழுக்கத்தான் மிகுதல் வாகையாம். ‘பார்ப்பனப் பக்கமும்’ என்றதனால் அப் பொருளின் மிகுதி கூறலும் இதன்பாற்படும். இது மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும்.

ஓதல் ஆவது — கல்வி பயிறல்.

உதாரணம்:

‘இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து’ (நாலடி - கல்வி - உ)

எனவரும். இது கல்வியின் விழுப்பங் கூறிற்று.

‘ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு
வேற்றுநா டாகா தமவேயா மாதலா
லாற்றுணா வேண்டுவ தில்’ (பழமொழி - கக௬)

இது கற்றோர்க்கு உளதாகும் விழுப்பங் கூறிற்று. இஃது ஏனைய மூன்று வருணத்தார்க்கும் ஒக்கும்.

ஓதுவித்தல் ஆவது — மறைநூல் ஓதுவித்தல், கேள்வித் தலைவனாகுதல்.

உதாரணம்:

‘எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு’ (குறள். அறிவு - ௩)

எனவரும். பிறவும் அன்ன.

வேட்டல் ஆவது — வேள்வித் தலைவனாய் நின்று யாகாதி இயற்றல்.

உதாரணம் :

'நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டி
னாறுணர்ந்த வொருமுதுநூ
லிகல்கண்டோர் மிகல்சாய்மமார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
வுரைசால் சிறப்பி னுரவோர் மருக
வினைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சைச்
சுவற்பூண் ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த வருங்கற்பி
னறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குற்
சிலசொல்லிற் பலகூந்தனி
னிலைக்கொத்தநின் றுணைத்துணைவியர்
தமக்கமைந்த தொழில்கேட்பக்
காஅ டென்றூ நாஅ டென்றூங்
கீஇ ரேழி னிடமுட் டாஅது
நீர்நாண நெய்வழங்கியு
மெண்ணாணப் பலவேட்டு
மண்ணாணப் புகழ்பரப்பியு
மருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை
என்றுங்
காண்கதில் லம்ம யாமே குடாஅது
பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற்
பூவிரி புதுநீர்க் காவிரி பரக்குந்

தண்புனற் படப்பை யெம்மூ ராங்க
னுண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ்
செல்வ லத்தை யானே செல்லாது
மழையண் ணுப்ப நீடிய நெடுவரைக்
கழைவள ரிமயம் போல
நிலீஇய ரத்தைநீ நிலமிசை யானே' (புறம் - கசுக)

எனவரும். பிறவும் அன்ன.

வேட்பித்தல் ஆவது — வேள்வி செய்வித்தல்; என்பது நான்மறை யுணர்ந்து இருபத்தொரு கூறுபாடுற்ற பொருள் நூல் அறிந்தவனைக் கொண்டு இயற்றுவிக்கும் கிரியை முதலியன என்றவாறும்.

உதாரணம் :

'நளிகட லிருங்குட்டத்து'

என்ற புறப்பாட்டுள்

'ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே' (புறம் - உசு)

எனவரும் அடிகளில் பார்ப்பார் வேட்பித்தவாறும் அரசன் வேட்டவாறும் கண்டு கொள்க.

ஈதல் ஆவது — இல்லெனை இரந்தோர்க்குக் கொடுத்தல்.

உதாரணம் :

'இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள' (குறள். ஈகை - உ)

எனவரும்.

ஏற்றல் ஆவது — கொள்வோன் தனது சிறப்பிற் குன்றுமற் கோடல்.

உதாரணம்:

'இரவலர் புரவலை நீயு மல்லை
புரவல ரிரவலர்க் கில்லையு மல்ல
ரிரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே' (புறம் - கசுஉ)

எனவரும்.

ஐவகை மரபின் அரசர் பக்கமும் என்பது—ஐவகைப்பட்ட அரசர் பக்கமும் என்றவாறு.

அவையாவன: ஓதலும், வேட்டலும், ஈதலும், படைவழங்குதலும், குடியோம்புதலும் ஆம். இவற்றுள் முந்துற்ற மூன்றும் மேற்சொல்லப்பட்டன. ஏனைய இரண்டும் இனிக் கூறப்படுவன. அவற்றுள் படை வழங்குதல்':

'கடுங்கண்ண கொல்களிற்றாற்
காப்புடைய வெழுமுருக்கிப்
பொன்னியற் புனைதோட்டியான்
முன்புதுரந்து சமந்தாங்கவும்
பாருடைத்த குண்டகழி
நீரழுவ நிவப்புக்குறித்து
நிமிர்பரிய மாதாங்கவு
மாவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் றடோய் தடக்கை' (புறம் - கச)

என்றவழிக் காண்க.

குடியோம்புதல் வருமாறு:

'இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்

வறிது நிலைஇய காயமும்
என்றாங்
கவையளந் தறியினு மளத்தற் கரியை
யறிவு மீரமும் பெருங்க ணோட்டமுஞ்
சோறுபடுக்குந் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
யம்புதுஞ்சுங் கடியரணா
லறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
யனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே' (புறம் - ௨0)

எனவரும். 'பக்கம்' என்றதனான் அரசரைப்பற்றி வருவனவற்றிற் கெல்லாம் இதுவே ஒத்தாகக் கொள்க.

இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் என்பது — ஆறு மரபினையுடைய வணிகர், வேளாளர் பக்கமும் என்றவாறு.

வணிகர்க்கு உரிய ஆறுபக்கமாவன : ஓதல் - வேட்டல் - ஈதல் - உழவு - வாணிகம் - நிரையோம்பல் என்பன.

உதாரணம் :

'உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து — முழுதுணர
வோதி யழல்வழிவேட் டோம்பாத வீகையா
னாதி வணிகர்க் கரசு' (வெண்பா. வாகை - ௬0)

எனவரும்.

வேளாளர்க்கு உரிய ஆறு மரபாவன: உழவு - உழவொழிந்த தொழில் - விருந்தோம்பல் - பகடு புறந்தரல் - வேட்டல் - வேதமொழி கல்வியோதல் என்பன.

உதாரணம் :

'சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை' (குறள். உழவு - க)

எனவரும். இஃது உழவின் சிறப்புக் கூறிற்று.

'கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்' (குறள். குடிசெயல் - க)

இஃது உழவொழிந்த தொழில் கூறிற்று.

'இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைத்தூண்செய் மாலை யவர்' (குறள். உழவு - ௫)

இது விருந்தோம்பல் கூறிற்று.

'பகடுபுறந் தருநர் பார மோம்பி' (புறம் - ௩௫)

இது பகடு புறந்தரல் கூறிற்று.

'பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பார் விருந்தோம்பி
வேள்வி தலைப்படு வார்' (குறள். விருந்தோம் - அ)

இது வேட்டல் கூறிற்று.

'நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பாலொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே' (புறம் - ௧அ௩)

இது வேதமொழிந்த கல்வியோதல் கூறிற்று. ஆக இவை ஆறும் வந்தவாறு காண்க.

'இருமூன்று மரபி னேனோர்' என ஒருங்கு ஓதினார், குல ஒப்புமையானும் தொழில் விகற்பம் மிக்கின்மையானும் வணிகரும் வேளாளரும் ஒரியற் படுவரெனக் கருதி.

இனி வேளாண்மாந்தர்க்கு வேட்டல் ஒண்ணு தென்பார் வழிபாடு ஒன்றனைக் கூட்டி ஆறென எண்ணிட்டு

'இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன — குடிப்பிறந்தார்
குன்ரு வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்ரு வுணரற்பாற் றன்று'
(நாலடி. குடிப்பிறப்பு - ௪)

என்ற செய்யுளைக் காட்டுவர். முடியுடை மன்னர் விழையக் காவிதிப்பட்டம் பெற்று அவ்வரசர்க்கு மகட்கொடைக்குரிய வேளாண் மாந்தர் தண்டத் தலைமை பெற்று உழுவித்துண்ணலே மரபாக வுடையராகலின் அன்னோர் பிறர்க்கு வழிபடு பெற்றியுடைய ராகார். இவ் வேளாளர் கன்னியருட் களவொழுகத்துப் பிறந்தார் உழுதூண் வினையுடையராகலின் அவர்க்கு உரித்து என்றலும் ஒன்று. இவற்றுள் ஏற்பது உய்த்துணர்க.

மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் 'ஆற்றிய அறிவன் தேயமும் என்பது — மழையும் பனியும் வெயிலும் ஆகிய குற்றமற்ற செயலையுடைய மூவகைக் காலத்தினையும் நெறியினாற் பொறித்த அறிவன் பக்கமும் என்றவாறு.

இனி இறந்தகாலம் முதலாகிய மூன்று காலத்தினையும் நெறியிற் றோற்றிய அறிவன் என்ருலோ எனின் அது முழுதுணர்ந்தோர்க்கு அல்லது புலப்படாமையின் அது பொருளன்று என்க. என்னை,

'பனியும் வெயிலுங் கூதிரும் யாவும்
துனியில் கொள்கையொடு நோன்மை யெய்திய
தணிவுற் றறிந்த கணிவன் முல்லை'

எனப் பன்னிருபடலத்துள் ஓதுதலின்; ஆகவே மேலதே பொருளாகக் கொள்க. அறிவன் என்றது கணிவனை.

மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றல் ஆவது — பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து

ஆண்டு நிகழும் வில்லும், மின்னும், ஊர்கோளும், தூமமும், மின்வீழ்வும், கோணிலையும், மழைநிலையும், பிறவும் பார்த்துக் கூறல் என்பதாம். அங்ஙனம் வேண்டுதலின் 'ஆற்றிய வறிவன்' என்றார்.

உதாரணம் :

'புரிவின்றி யாக்கைபோற் போற்றுவ போற்றிப்
பரிவின்றிப் பட்டாங் கறியத் — திரிவின்றி
விண்ணிவ் வுலகம் விளைக்கும் விளைவெல்லாங்
கண்ணி யுரைப்பான் கணி' (வெண்பா. வாகை - உ0)

என்றார் பின்னூலாரும்.

நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும் என்பது — எட்டு வகைப்பட்ட வழக்கினையுடைய தாபதப் பக்கமும் என்றவாறு.

அவையாவன : நீராடல், நிலத்திடைதல், தோலுடுத்தல், சடை புனைதல், எரி யோம்பல், ஊரடையாமை, கான் உணவே கோடல், தெய்வபூசை திதிபூசை கோடல் என்பன. என்னை ?

'நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி — யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி' (வெண்பா. வாகை - கச)

என்றாராகலின்.

இதனைப் பிறரும்,

'நீஇ ராட னிலக்கிடை கோட
ரோஒ வுடுத்த றொல்லெரி யோம்ப
லூரடை யாமை யுறுசடை புனைதல்
காட்டி லுணவு கடவுட் பூசை
யேற்ற தவத்தி னியல்பென மொழிப'

என்றார்.

உதாரணம் :

'ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளி
ரிழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகுங்
கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே' (புறம்-உருக)

எனவும்,

'கறங்குவெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோ
டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
யில்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே' (புறம்-உருஉ)

எனவும் வரும். பிறவும் அன்ன.

பால் அறி மரபில் பொருநர்கண்ணும் என்பது — பாகுபாடு அறிந்த மரபினையுடைய பொருநர்மாட்டும் என்றவாறு.

அஃதாவது, வாளானும் தோளானும் பொருதலும், வென்றி கூறலும் வாகையாம் என்பதாயிற்று.

வாளான் மிகுதல் :

'எந்துவாட் டானை யிரிய வுறைகழித்துப்
போந்துவாண் மின்னும் பொருசமத்து — வேந்த
ரிருங்களி யானை யினமிரிந் தோடக்
கருங்கழலான் கொண்டான் களம்'

எனவரும். (வெண்பா-வாகை-உரு)

மல் வென்றி :

'இன்கடுங் கள்ளி னுழு ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
யொருகான் மார்பொதுங் கின்றே யொருகால்

வருதார் தாங்கிப் பின்னெதுங் கின்றே
நல்கினுந் நல்காஅ ளாயினும் வெல்போர்ப்
போராருந் தித்தன் காண்கதில் லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல
இருதலை யொசிய வெற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே' (புறம்-அ0)

எனவரும்.

அனை நிலை வகையொடு என்பது — வாளானும் தோளானும் பொருது வேறலன்றி அத்தன்மைத்தாகிய நிலைவகையான் வேறல் என்றவாறு.

அவையாவன: சொல்லான் வேறலும், பாட்டான் வேறலும், கூத்தான் வேறலும், சூதான் வேறலும், தகர்ப்போர் பூழ்ப்போர் என்பனவற்றால் வேறலும், பிறவும் அன்ன. ஒடு - எண்ணம் சுட்டியது.

'விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்' (குறள்-சொல்வன்-அ)

இது சொல்வென்றி.

'வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாற் — பண்
கின்னரம் போலக் கிளையமைத்த தீந்தொடையா[டங்கு
மூந்நரம்பு மச்சுவையு மாய்ந்து'(வெண்பா-பெருந்தி-கஅ)

இது பாடல்வென்றி.

'கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு — பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றாடுந்
தொடுகழன் மன்னன் றுடி' (வெண்பா-பெருந்தி-கஎ)

இஃது ஆடல்வென்றி.

'கழகத் தியலுங் கவற்றி னிலையு
மளகத் திருநுதலா ளாய்ந்து — புழகத்து
பாய வகையாற் பணிதம் பலவென்று
ளாய வகையு மறிந்து' (வெண்பா-பெருந்தி-கசு)

இது சூதுவென்றி.

'இன்கடுங்கள்ளின்' (புறம்-அ0)

என்ற புறப்பாட்டுள் மல்வென்றி வருமாறு முன்னர்க் காட்டப்பட்டதாக, அதனுள் வரும்,

'களம்புகு மல்லற் கடந்தடுநிலை'

என்பதை ஏற்குமாறு கொள்க. பிறவும் அன்ன.

ஆக வாகைத்திணையானது ஆங்கு எழு வகையால் தொகைநிலை பெற்றது என்மனார் புலவர் என்று முடிக்க. இது தொகை. (கசு)

எரு. கூதிர் வேனி லென்றிரு பாசறைக்
காதலி னொன்றிக் கண்ணிய வகையினு
மேரோர் களவழி யன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியுந் தேரோர்
வென்ற கோமான் முன்றேர்க் குரவையு
மொன்றிய மரபிற் பின்றேர்க் குரவ்ய்யும்
பெரும்பகை தாங்கும் வேலி னானு
மரும்பகை தாங்கு மாற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமு
மொல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையி னொன்றொடு புணர்த்துத்
தொல்லுயிர் வழங்கிய வவிப்பலி யானு
மொல்லா ரிடவயிற் புல்லிய பாங்கினும்
பகட்டி னானு மாவி னானுந்
துகடபு சிறப்பிற் சான்றோர் பக்கமுங்
கடிமனை நீத்த பாலின் கண்ணு
மெட்டுவகை நுதலிய வவையகத் தானுங்
கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானு
மிடையில் வண்புகழ்க் கொடைமி னானும்
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்

பொருளொடு புணர்ந்த பக்கத் தானு
மருளொடு புணர்ந்த வகற்சி யானுங்
காம நீத்த பாலி னுமென்
றிருபாற் பட்ட வொன்பதின் றுறைத்தே.

இது வாகைத்திணைக்கு உரிய துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — கூதிர்ப் பாசறை முதலாகக் காம நீத்தபால் ஈறுகச் சொல்லப்பட்ட பதினெட்டுத் துறையும் வாகைத் திணைக்கு உரிய துறையாம் என்றவாறு.

எனவே மேற்சொல்லப்பட்ட ஏழ் வகையும் திணை வகை என்று கொள்க.

கூதிர் வேனில் என்று இரு பாசறைக் காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும் என்பது — கூதிர்க் காலமும் வேனிற் காலமும் என்று சொல்லப்பட்ட இருவகைப் பாசறை நிலைவகையினும் என்றவாறு.

'காதலால் ஒன்றிக் கருதும் வகை' எனக் கூட்டுக. இவை இரண்டும் ஒருவகை.

உதாரணம் :

'கவலை மறுகிற் கடுங்கண் மறவ
ருவலைசெய் கூரை யொடுங்கத் — துவலைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்
மூதின் மடவாண் முயக்கு' (வெண்பா-வாகை-கடு)

என வரும். பிறவும் அன்ன.

ஏரோர் களவழி அன்றிக் களவழித் தேரோர் தோற்றிய வென்றியும் என்பது — ஏரோர் களத்தின் வழிக் கூறுதல் அன்றிக் களவழியைத் தேரோர் தோற்று வித்த வென்றியும் என்றவாறு.

என்றது களம்பாடுதலும் களவேள்வி பாடுதலுமாம்

உதாரணம் :

'இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் படைந்த
குருதிப் பல்லிய முரசுமுழக் காக
வரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
யீரச் செருவிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற்
பிடித்தெறி வைவேற் கணையமொடு வித்தி
விழுத்தலை காய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேஎய் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்க்
கானரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
வோடை நுதல வொல்குதலை யறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே' (புறம்-௩௬௯)

எனவரும். இஃது ஏரோர் களத்தின்வழி கூறியது.

'ஓஒ வுவமை யுறழ்வின்றி யொத்ததே
காவிரி நாடன் கழுமலங் கொண்டநாண்
மாவுதைப்ப மாற்றார் குடையெல்லாங் கீழ்மேலா
யாவுதை காளாம்பி போன்ற புன்னாடன்
மேவாரை யட்ட களத்து' (களவழி-௩௬)

இது களங்கூறியது. ஆசிரியர் பொய்கையார் வாக்கு.

'நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவுங்
களனகற்றிய வியலாங்க
ணொளிறிலைய வெஃகேந்தி
யரசுபட வமருழக்கி
யுரைசெல முரசுவெளவி
முடித்தலை யடுப்பாகப்
புனற்குருதி யுலைக்கொளீஇத்
தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியி
னடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
வான்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே
நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே' (புறம்-உசு)

இது களவேள்வி கூறியது.

தேரோர் வென்ற கோமான் முன் தேர்க்குரவையும் என்றது — தேரோரைப் பொருது வென்ற அரசன் முன் ஆடுங் குரவையும் என்றவாறு.

உதாரணம் :

'களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை துயல்வரச் சூடி யுணத்தின
வானாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
வுருகெழு பேஎய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களனறி வோயே' (புறம்-நஎக)

எனவரும்.

ஒன்றிய மரபில் பின்தேர்க் குரவையும் என்றது — தேரோர் வென்ற கோமான் ஒன்றிய மரபில் ஆடும் பின் தேர்க்குரவையும் என்றவாறு.

உதாரணம் :

'வஞ்சமிக் கோலானை வாழ்த்தி வயவரு
மஞ்சொல் விறலியரு மாடபவே — வெஞ்சமரிற்
குன்றேர் மழகளிறுங் கூந்தற் பிடியும்போற்
பின்றேர்க் குரவை பிணைந்து' (வெண்பா-வாகை-அ)

எனவரும்.

பெரும் பகை தாங்கும் வேலினானும் என்றது — பெரிய பகையினைத் தாங்கும் வேலினைப் புகழு மிடத்தும் என்றவாறு.

உதாரணம் :

'இவ்வே,
பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்தி கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்று
முண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணு
மில்லோ ரொக்கற் றலைவ
னண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே' (புறம்-கூரு)

எனவரும்.

'நிலைதிரி பெறியத் திண்படை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய' (புறம்-உரு)

என்பதும் அது.

அரும்பகை தாங்கும் ஆற்றலானும் என்றது — பொருதற்கு அரிய பகையினைப் பொறுக்கும் ஆற்றற்கண்ணும் என்றவாறு.

உதாரணம் :

'களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைக
லெண்டேர் செய்யுந் தச்சன்
றிங்கள் வலித்த காலன் னோனே' (புறம்-அஎ)

எனவரும்.

'என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்' (குறள்-படைச்செ-க)

என்பதும் அது.

புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும் என்றது — பொருந்தாத வாழ்க்கையினையுடைய வல்லாண் பக்கமும் என்றவாறு.

உதாரணம்:

'எருது காலுற திளைஞர் கொன்ற
சில்வினை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ருண்டுகடை தப்பலி
னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
வரகுகட னிரக்கு பெருந்தகை
யரசுவரிற் றுங்கும் வல்லா ளன்னே' (புறம்-நஉஎ)

எனவரும்.

ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்துத் தொல் உயிர் வழங்கிய அவிப்பலியானும் என்றது — பொருந்தாதார் நாணுமாறு தலைவனைக் குறித்து முன்பு சொன்ன வஞ்சின மரபின் ஒன்றொடு பொருந்தித் தொன்றுதொட்டு வருகின்ற உயிரை வழங்கிய அவிப்பலியும் என்றவாறு.

உதாரணம்:

சிறந்த திதுவென்னச் செஞ்சோறு வாய்ப்ப
மறந்தரு வாளம ரென்னும் — பிறங்கழலு
ளாருயி ரென்னு மவிவேட்டா ராங்கஃதால்
வீரியரெய் தற்பால வீடு' (வெண்பா. வாகை-நo)

எனவரும்.

'இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தீ தொறுக்கிற் பவர்' (குறள். படைச்செ-கூ)

என்பதும் அது.

ஒல்லார் இடவயிற் புல்லிய பாங்கினும் என்றது — பொருந்தாதா ரிடத்தின்கண் பொருந்திய பக்கத்தினும் என்றவாறு.

அஃதாவது, போர் இல்வழி நாடு கைத்தென்று கொண்டிருத்தல் என்றவாறும்.

உதாரணம் :

'மாண்டனை பலவே போர்மிகு குருசினீ
மாதிரம் விளக்குஞ் சால்புஞ் செம்மையு
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று
துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப
வீத்தான் றுறு விடனுடை வளனுந்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியு
மெல்லா மெண்ணி னிடுகெழங்கு தபுந
கொன்னென்று மருண்டனெ னடுபோர்க் கொற்றவ
நெடுமிடல் சாயக் கொடுமிட றுமியப்
பருமலை யானையொடு புலங்கெட விறுத்துத்
தடந்தா ணாரை படிந்திரை கவரு
முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்
பிழையா விளையு ணாடகப் படுத்து
வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேளத் தாயினுஞ்
சினவா யாகுத லிறும்பூதாற் பெரிதே' (பதிற்று - ௩௨)

எனவரும். இதனுள் பகைவர் நாடு கைக்கொண்டிருந்த வாறு அறிக.

பகட்டினானும் ஆவினானும் துகள் தபு சிறப்பின் சான்றோர் பக்கமும் என்றது — பகட்டினானும் ஆவினானும் குற்றந் தீர்ந்த சிறப்பினை உடைத்தாகிய சான்றோர் பக்கமும் என்றவாறு.

பகட்டால் புரை தீர்ந்தோர் வேளாளர். ஆவால் குற்றந் தீர்ந்தோர் வணிகர். இவ்விரு குலத்தினும்

அமைந்த சான்றோர் பக்கம் என்க. என்றது * இவர் குலத்தினுள்ளார் அருளான் மிக்க நீர்மைய ராதலின் வேறு ஓதப்பட்டது.

உதாரணம் :

'உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே' (புறம் கஅஉ)

என்பதும் காண்க. நோன்றாட் பிறர்க்கென முயலுநர் — வணிக வேளாளர்.

கடி மனை நீத்த பாலின்கண்ணும் என்றது — கடி மனை நீத்த பக்கத்தினிடத்தும் என்றவாறு.

அஃதாவது பிறர்மனை நயவாமை. மேல், 'காமநீத்த பாலினும்' என வேறு ஓதுகின்றன ராகலின், இது மனையறத்தின் நின்றோரை நோக்க வரும்.

உதாரணம் :

'பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு'

(குறள். பிறனில் - அ)

எனவரும்.

எட்டு வகை நுதலிய அவை அகத்தானும் என்றது — எட்டுப் பாகுபாட்டைக் குறித்த அவை யகத்தின்கண்ணும் என்றவாறு.

* 'இவர் குலத்தினுள்ளனவான மிக்க நீர்மையாதலின்' எனவும் பாடம்

'எட்டு வகை நுதலிய அவையகம்' என்றமையான் ஏனை அவையின் இவ்வவை மிகுதியுடைத்து என்றவாறு.

அவையாவன — குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுநிலைமை, அழுக்காறுமை, அவாவின்மை என்பன. அவை எட்டினானும் அவை வருமாறு :

'குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு நாளும்
வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையின்
காதலின் பத்துத் தாங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலு
மழுக்கா றின்மை யவாஅ வின்மையென
விருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை
யுடன்மரீஇ யிருக்கை யொருநாட் பெறுமெனிற்
பெறுகதில் லம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே'

(ஆசிரியமாலை.)

என வருவதனுட் காண்க.

கட்டு அமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும் என்றது — கட்டுதல் அமைந்த ஒழுக்கத்தினைக் குறித்த நிலையினும் என்றவாறு.

அஃதாவது இல்லறத்தார்க்கு உரித்தாக நான்கு வருணத்தார்க்குஞ் சொல்லப்பட்ட அறம்.

அவையாவன — அடக்கமுடைமை, ஒழுக்க முடைமை, நடுவு நிலைமை, வெஃகாமை, புறங் கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை என்பன; அவற்றின்கண் நிற்றல் மிகுதியாதலின் 'ஈண்டு வாகை யாயின.

அடக்கம் உடைமை — பொறிகள் ஐம்புலன்கண் மேற் செல்லாமை அடக்கியாளுதல்.

உதாரணம் :

'ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து' (குறள். அடக்கமு-சு)

எனவரும்.

ஒழுக்கம் உடைமை — தம் குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஒத்த ஒழுக்கம் உடையராகுதல்.

உதாரணம் :

'ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்' (குறள். ஒழுக்கமு - க)

எனவரும்.

நடுவு நிலைமை — பகைவர்மாட்டும் நட்டார்மாட்டும் ஒக்க நிற்கும் நிலைமை.

உதாரணம் :

'சமஞ்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி' (குறள். நடுவு - அ)

எனவரும்.

வெஃகாமை — பிறர் பொருளை விரும்பாமை.

உதாரணம் :

'படுபயன் வெஃகிப் பழிப்பன செய்யார்
நடுவன்மை நாணு பவர்' (குறள். வெஃகாமை - உ)

எனவரும்.

புறங் கூறாமை — ஒருவரை ஒருவர் புறத்து உரையாடாமை.

உதாரணம்:

'அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது' (குறள். புறங்கூறா - க)

எனவரும்.

தீவினை அச்சம் — தீவினையைப் பிறர்க்குச் செய்தலை அஞ்சுதல்.

உதாரணம்:

'தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு' (குறள். தீவினயச் - க)

எனவரும்.

அழுக்காறுமை — பிறர் ஆக்கம் முதலாயின கண்டு பொறாமையால் வரும் மனக் கோட்டத்தினைச் செய்யாமை.

உதாரணம்:

'ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு' (குறள். அழுக்கா - க)

எனவரும்.

பொறை யுடைமை — பிறர் தமக்கு மிகுதியாகச் செய்தவழி வெகுளாமை.

உதாரணம்:

'மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்' (குறள். பொறையுடை-அ)

எனவரும்.

பிறவும் இந்நிகரன வெல்லாம் கொள்க.

இடை இல் வண்புகழ்க் கொடையினானும் என்றது — இடைதல் இல்லாத வளவிய புகழினைத் தருங் கொடையின்கண்ணும் என்றவாறு.

அஃதாவது, கொடுத்தற்கு அரியன கொடுத்தல். இதுவும் பாகுபாடு மிகுதிப்படுதலின் வாகை ஆயிற்று.

உதாரணம் :

'மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வ
ரின்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற்
றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே
தாடாழ் படுமணி யிரட்டும் பூநுத
லாடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
னாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையி
னாடுமலி யுவகையொடு வருவ
லோடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே'

(புறம் - கரு௬).

எனவரும்.

பிழைத்தோர்த் தாங்கும் காவலானும் என்றது — தம்மாட்டுப் பிழைத்தோரைப் பொறுக்கும் ஏமத்தானும் என்றவாறு.

உதாரணம் :

'தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா — லும்மை
யெரிவாய் நரகத்து ளெய்துங்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்' (நாலடி. துறவு - அ)

எனவரும்.

'அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை' (குறள், பொறையுடை-க)

என்பதும் அது.

பொருளொடு புணர்ந்த பக்கத்தானும் என்றது — மெய்ப்பொருள் உணர்வொடு சேர்ந்த பக்கமும் என்றவாறு.

உதாரணம்:

'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு' (குறள். மெய்யுணர் - ௪)

எனவும்,

'சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்' (குறள். மெய்யுணர் - ௯)

எனவும் வரும்.

இன்னும், 'பொருளொடு புணர்ந்த பக்கம்' என்றதனான், அறம் பொருள் இன்பம் என்ற மூன்றனுள் அறனும் இன்பமும் அன்றி ஒழிந்த பொருளொடு பொருந்திய பக்கமும் என்றுரைப்பினுமாம். பொருளாவது — நாடும், பொருளும், அரணும், அமைச்சும், நட்பும், படையும்;

'படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு' (குறள். இறைமாட் - ௧)

என்பதனாற் கொள்க. இவற்றின் மிகுதி கூறலின் வாகையாயிற்று.

நாடாவது:

'தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு' (குறள். நாடு - ௧)

என்க.

பொருளாவது:

'உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்'
(குறள். பொருள்செய் - ௬)

என்க.

அரணாவது :

'கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்' (குறள். அரண் - ரு)

என்க.

அமைச்சாவது :

'வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு' (குறள். அமைச்சு - உ)

என்க.

நட்பாவது :

'அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு' (குறள். நட்பு - எ)

என்க.

படையாவது :

'அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை' (குறள். படைமாட்சி - ச)

என்க.

இன்னும், 'பக்கம்' என்றதனால், ஒற்று, தூது, வினை செயல்வகை, குடிமை, மானம் என வருவனவெல்லாங் கொள்க.

ஒற்றாவது :

'கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று' (குறள். ஒற்று - ரு)

என்க.

தூதாவது :

'கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது' (குறள். தூது - சு)

என்க.

வினைசெயல்வகை யாவது :

'பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்' (குறள். வினைசெயல் - ரு)

என்க.

குடிமை யாவது :

'நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு' (குறள். குடிமை - ந)

என்க.

மானமாவது :

'இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்' (குறள். மானம் - க)

என்க.

இன்னும், 'புணர்ந்த பக்கம்' என்றதனாற் புதல்வர்ப் பெறுதலுங் கொள்க.

உதாரணம் :

'படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே' (புறம். கஅஅ)

எனவரும்.

அருளொடு புணர்ந்த அகற்சியானும் என்றது — அருளொடு பொருந்தின துறவின்கண்ணும் என்றவாறு.

அஃதாவது — அருளுடைமை, கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, புணர்ச்சி விழையாமை, கள்ளுண்ணாமை, துறவு என்பனவாம்.

அவற்றுள், அருளுடைமை ஒழிந்த எல்லாம் விடுத்தலின் 'அகற்சியானும்' என்றார்.

அருளுடைமை யாவது — யாதானும் ஓர் உயிர் இடர்ப்படுமிடத்துத் தன்னுயிர் வருந்தினாற்போல வருந்தும் ஈரமுடைமை.

உதாரணம் :

'அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள' (குறள். அருளுடை - க)

எனவரும்.

கொல்லாமை யாவது — யாதொன்றனையுங் கொலை செய்யாமை.

உதாரணம் :

'அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்' (குறள். கொல்லா - க)

எனவரும்.

பொய்யாமை யாவது — தீமை பயக்குவ தாகிய சொல்லைக் கூறாமை

உதாரணம் :

'வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்' (குறள். வாய்மை - க)

எனவரும்.

கள்ளாமை யாவது — பிறர்க்கு உரிய பொருளைக் களவினாற் கொள்ளாமை.

உதாரணம் :

'களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்' (குறள். கள்ளா - எ)

எனவரும்.

புணர்ச்சி விழையாமை யாவது — பிரமசரியத்தினை விடாது காத்தல்.

உதாரணம் :

'மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர்
நோக்கார்கொ னொய்யதோர் புக்கில்லை — யாக்கைக்கோ
ரீச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல்' (நாலடி. தூயதன் - க)

எனவரும்.

'வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபின்
னீண்டியற் பால பல' (குறள். துறவு - உ)

என்பது பிரமசரியக் காப்பின் விளைவு கூறியது.

கள்ளுண்ணாமை யாவது — வெறி யேறத்தக்க மது முதலிய உட்கொள்ளாமை.

உதாரணம் :

'களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்' (குறள். கள்ளுண்ணா - அ)

எனவரும்.

துறவு ஆவது — தன்னுடைய பொருளைப் பற்றறத் துறத்தல்.

உதாரணம் :

'யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி லதனி னிலன்' (குறள். துறவு - க)

எனவரும்.

காமம் நீத்த பாலினும் என்றது — ஆசையை அற விடுத்த பக்கத்தினும் என்றவாறு.

உதாரணம் :

'காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெடக்கெடு நோய்' (குறள். மெய்யுணர் - க0)

எனவரும்.

'மற்றுத் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றூர்க் குடம்பு மிகை' (குறள். துறவு - ௬)

என்பது அறவிடுக்கும் இயல் கூறியது.

என்று இருபாற்பட்ட ஒன்பதின் துறைத்து சொல்லிய திணை எனக் கூட்டி முடிக்க. (௧௭)

எ௬. காஞ்சி தானே பெருந்திணைப் புறனே
பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானு
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே.

இது காஞ்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — காஞ்சி என்னும் புறத்திணை பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனும்; அது பாங்காகுதல் அரிய சிறப்பினுற் பல நெறியானும் நில்லாத உலகத்தைப் பொருந்திய நெறியை உடைத்து என்றவாறு.

பாங்கருமை யாவது — ஒருவற்கு ஒரு துணையாகாமை. நிலையாமை மூவகைப்படும், இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என.

அவற்றுள், இளமை நிலையாமை :

உதாரணம் :

'பனிபடு சோலை பயன்மர மெல்லாங்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை — நனிபெரிதும்
வேற்கண்ணு ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளுங்
கோற்கண்ண ளாகுங் குனிந்து'
(நாலடி. இளமைநிலை - ௭)

எனவரும்.

செல்வம் நிலையாமை :

உதாரணம் :

'அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் — வறிஞராய்ச்

சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று'

(நாலடி - செல்வநிலை - க)

எனவரும். யாக்கை நிலையாமை முன்னர்க் காட்டுதும்.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், தனக்கென ஓர் நிலன் இல்லாததும்,

'ஏறிய மடற்றிறம்' (தொல். அகத்தி - ருச)

முதலாகிய நான்கு குறிப்பினை யுடையதுமான பெருந்திணைபோல நிலையின்மை மூன்றனுக்கும் உரித்தாய் நிலம் பெறாது வருதலானும், பொருந்தாக் காமத்தினை இகழ்ந்து உரைத்தல் போன்று ஆன்றோர் நிலையாமையினைப் பொருளாகவுடைய இதனையும் இகழ்ந்து உரைத்தலானும் என்க. முற்றும் அறியாதானை நிறைவுப்பொருள் காட்டும் அடைகொடுத்து முழுமகன் என்றாற்போல, இன்பம் முற்றும் ஒவ்வாவியலினைப் 'பெருந்திணை' என்ற பெயரால் வழங்கினார் என்றலும் ஒன்று; ஆகவே, அதற்கு ஏற்பக் கூறலுமாம். (கஅ)

எஎ. மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையுங்
கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியு மறத்தி னானு
மேமச் சுற்ற மின்றிப் புண்ணோற்
பேஎ யோம்பிய பேஎய்ப் பக்கமு
மின்னனென் றிரங்கிய மன்னை யானு
மின்னது பிழைப்பி னிதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானு
மின்னகை மனைவி பேஎய் புண்ணோற்
றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியு

நீத்த கணவற் றீர்த்த வேலிற்
பேர்த்த மனைவி யாஞ்சி யானு
நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானு
முலையு முகனுஞ் சேர்த்திக் கொண்டோன்
றலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
யீரைந் தாகு மென்ப பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்ற
மாய்ந்த பூசன் மயக்கத் தானுந்
தாமே யேங்கிய தாங்கரும் பையுளுங்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமும்
நளிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையுங்
கழிந்தோர் தேத்துக் கழிபட ருறீஇ
யொழிந்தோர் புலம்பிய கையறு நிலையுங்
காதலி யிழந்த தபுதார நிலையும்
காதல னிழந்த தாபத நிலையு
நல்லோள் கணவனொடு நளியழற் புகீஇச்
சொல்லிடை யிட்ட மாலை நிலையு
மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பயந்த
தாய்தப வரூஉந் தலைப்பெய னிலையு
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பிற் றுறையிரண் டுடைத்தே,

இது காஞ்சித்திணைக்கு உரிய துறைவகை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை' முதலாக 'முலையு முகனுஞ் சேர்த்திக் கொண் டோன் றலையொடு முடிந்த நிலையொடும்' கூட்டிப் பத் தாகும் என்பர் ஒருசார் ஆசிரியர்; 'பூசன் மயக்கம்' முதலாகக் 'காடு வாழ்த்து' ஈறாக வருவனவற்றொடு முன் னதுகூட இருவேறு வகைப்பட்ட துறையினை யுடைத் தாகும் ஓதிய திணை என்றவாறு.

எனவே, முன் வகுத்த பத்தும், பின் வகுத்த பத் தும், இருவகைப்பட்ட துறையுள் அடங்கும் என்ற வாறும். முற்படவோதிய பத்தே காஞ்சித்துறை என்பார் மதம் விலக்கிப் பிற்படப் பத்து உரைத்துத் துறைவகை யான் இரண்டு என்றார்; எனவே, ஒருவாற்றான் முன்னு லாரைத் தழுவினர் எனலுமாம்.

மாற்று அருங் கூற்றம் சாற்றிய பெருமையும் என் றது — மாற்றுதற்கு அரிய கூற்றம் வரும் எனச் சொல்லப் பட்ட பெருங் காஞ்சியும் என்றவாறு.

கூற்றம் - காலக் கடவுள்.

உதாரணம்:

'இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநில
முடையிலை நடுவணத் திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவல
ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்த
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க
ணுப்பிலா வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோ னீயப்பெற்று

நிலங்கல னாக விலங்குபலி மிசையு
மின்னா வைகல் வாரா முனனே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே' (புறம்-௩௬௩)

எனவரும்.

கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும் என்றது — அறிவான் மிக்கோர் அல்லாதார்க்குச் சொன்ன முதுகாஞ்சியும் என்றவாறு.

உதாரணம் :

'பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்புமி னதுதா
னெல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே' (புறம் - ௧௯௫)

எனவரும்.

பண்பு உற வரூஉம் பகுதி நோக்கிப் புண் கிழித்து முடியும் மறத்தினானும் என்றது — இயல்புற வரும் பகுதி நோக்கிப் புண் கிழித்து முடியும் மறக் காஞ்சியும் என்றவாறு.

உதாரணம் :

'நகையமா ராய நடுங்க நடுங்கான்
றொகையமரோட்டிய துப்பிற் — பகைவர்மு
னுங்கிச் சினவுத ஞேனா னுதிவேலாற்
பொங்கிப் பரிந்திட்டான் புண்' (வெண்பா. காஞ்சி - ௧௫)

எனவரும்.

ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோன் பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும் என்றது — ஓம்பும் சுற்றம் இன்மை யாற் புண்ணோனைப் பேய் ஓம்பிய பேய்ப்பக்கமும் என்றவாறு.

உதாரணம்:

'ஆயு மடுதிறலாற் கன்பிலா ரில்போலுந்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப் — பேயுங்
களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தா
னுளம்புகல வோம்ப லுறும்' (வெண்பா. காஞ்சி - கசு)

எனவரும்.

இன்னன் என்று இரங்கிய மன்னையானும் என்றது— இத்தன்மையான் என உலகத்தார் இரங்கிய மன்னைக் காஞ்சியும் என்றவாறு.

உதாரணம்:

'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
யென்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
யம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
யருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
யிரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
வஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவ னருநிறத் தியங்கு வேலே
யாசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
வினிப்பா டுநரு மில்லைப் பாடுநர்க் கொன்
றீகுநரு மில்லைப்

பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயர்தவப் பலவே' (புறம் - உஙரு)

எனவரும்.

இன்னது பிழைப்பின் இது ஆகியர் எனத் துன் அருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும் என்றது — இன்ன வாறு ஒன்று செய்தலைப் பிழைத்தேனாயின் இன்னேன் ஆகக்கடவேன் எனக் கூறிய துன்னற்கு அரிய சிறப்பினை யுடைய வஞ்சினக் காஞ்சியும் என்றவாறு.

உதாரணம்:

'நகுதக் கனரே நாடுமீக் கூறுந
ரிளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தா
ணெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
யருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
வென்னிழல் வாழ்நர் சென்னிழற் காணது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
வோங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
விரப்போர்க் கீயா வின்மையா னுறவே', (புறம் - எஉ

எனவரும்.

இன் நகை, மனைவி பேஎய் புண்ணோன் துன்னுதல், கடிந்த தொடாஅக் காஞ்சியும் என்றது — இனியு நகை

யார்ந்த மனைவி பேய் புண்ணோனைக் கிட்டுதலைக் * கடிந்த தொடாக்கொஞ்சியும் என்றவாறு.

உதாரணம் :

'தீங்கனிப் புறவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழு திழுகி
யையவி சிதறி யாம்ப லூதி
யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிப்
பூம்பொறி யுடைய நெடுந்தகை புண்ணே' (புறம்-உ அக)

எனவரும்.

நீத்த கணவன் தீர்த்தவேலிற் பேர்த்த மனைவி ஆஞ்சியானும் என்றது — தன்னை நீத்த கணவன் விடுத்த வேலினால் மனைவி தன்னுயிரையும் பெயர்த்த ஆஞ்சியும் என்றவாறு. பேர்த்த - விகாரம்.

உதாரணம் :

'கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ-னவ்வேலே
யம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று' (வெண்பா. காஞ்சி-உரு)

எனவரும்.

நிகர்த்து மேல் வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும் என்றது — ஒத்து மாறுபட்டுவந்த வேந்தனொடு தன் தொல்குலத்து மகட்கொடை அஞ்சிய மகட்பாற் காஞ்சியும் என்றவாறு.

முதுகுடி — வேளாளர் குடியினைக் குறித்தது.

* 'காத்த' எனவும் பாடம்.

உதாரணம் :

'நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையு
நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்
றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே' (புறம் - ௩௪௯)

எனவரும். இது பெருஞ்சிக்கல் கிழான் மகட்கொடை மறுத்தது.

முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன் தலையொடு முடிந்த நிலை என்றது — தன்னைக் கொண்டோன் தலையொடு தனது முலைகளையும் முகத்தையும் சேர்த்தி இறந்த நிலையும் என்றவாறு.

உதாரணம் :

''கொலையானுக் கூற்றங் கொடிதே கொழுநன்
றலையானு டையலாள் கண்டே — முலையான்
முயங்கினாள் வாண்முகஞ் சேர்த்தினா ளாங்கே
யுயங்கினா ளோங்கிற் றுயிர்' (வெண்பா. காஞ் - க௩)

எனவரும்.

கோப் பெருந்தேவி உயிர் நீப்பும் இதனுள் அடக்குக. இந் நிலையொடு தொகைஇ சொல்லப்பட்ட ஈரைந்து ஆகும் என்க.

பேரிசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் மாய்ந்த பூசல் மயக்கத்தானும் என்றது — பெரிய இசையுடனாய் மாய்ந்தவனைச் சுற்றிய அவன் சுற்றத்தார் அவன் மாய்ந்தமைக்கு இரங்கி அழுத மயக்கமும் என்றவாறு.

பெயர்த்தும் 'மாய்ந்த' என்றார், தலைவன் புகழுடம்பு பெறலை அறிந்தும் மயக்கத்தான் அவன் பிரிவிற்கு இரங்கி அழுதலைக் கூட்ட.

உதாரணம் :

'மீனுண் கொக்கின் றூவி யன்ன
வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்
களிறெறிந்து பட்டன னென்னு முவகை
யீன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே' (புறம் - உஎஎ)

எனவரும்.

தாமே ஏங்கிய தாங்கு அரும் பையுளும் என்றது — சிறைப்பட்டார் தாமே தனித்திருந்து ஏங்கிய பொறுத் தற்கரிய துன்பத்தினைக் கூறும் கூற்றும் என்றவாறு.

உதாரணம் :

'குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபத
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
யீன்ம ரோவிவ் வுலகத் தானே' (புறம் - எச)

எனவரும்.

கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும் என்றது — கணவனொடு இறந்த செலவை நோக்கி ஆண்டுச் செல்வோர் செப்பிய மூதானந்தமும் என்றவாறு.

உதாரணம் :

'ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க்
கீருயி ரென்ப ரிடைதெரியார் — போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கு
முடனே யுலந்த துயிர்' (வெண்பா. பொதுவி - க)

எனவரும்.

நளி மிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முது பாலையும் என்றது — வெண்டேர்க்கொடுமை மிக்க சுரத்திடைக் கணவனை யிழந்து தனியளாய்த் தலைமகள் வருந்திய முதுபாலையும் என்றவாறு.

உதாரணம் :

'ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
யெடுத்தனன் கொளினே யகன்மார் பெடுக்க வல்லே
னென்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை
யின்னா துற்ற வறனில் கூற்றே
நிறைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே' (புறம் - உருடு)

எனவரும்.

கழிந்தோர் தேத்துக் கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும் என்றது — செத்தோர் மாட்டுச் சாவாதோர் மிக்க வருத்தமுற்றுப் புலம்பிய கையறு நிலையும் என்றவாறு.

உதாரணம் :

'செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினு
முற்றன் றாயினு முய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
யிரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டமர் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்ட கூற்றே' (புறம் - உஉசு)

எனவரும்.

காதலி இழந்த தபுதார நிலையும் என்றது — காதலியை இழந்த கணவனது தபுதார நிலையும் என்றவாறு

உதாரணம் :

'யாங்குப் பெரிதாயினு நோயள வெனைத்தே
யுயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையிற்
கள்ளி போகிய களரியம் பறந்தலை

வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனன் மடந்தை
யின்னும் வாழ்வ லென்னிதன் பண்பே' (புறம். உசரு)

எனவரும்.

காதலன் இழந்த தாபத நிலையும் என்றது — காதலனை இழந்தவள் நிற்கும் தாபத நிலையும் என்றவாறு.

உதாரணம்:

'அளிய தாமே சிறுவெள் ளாம்ப
லிளைய மாகத் தழையா யினவே
இனியே
பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணு
மல்லிப் படூஉம் புல்லா யினவே' (புறம் - உசஅ)

எனவரும்.

நல்லோள் கணவனொடு நளி அழல் புகீஇச் சொல் இடையிட்ட மாலை நிலையும் என்றது — கணவனொடு கிழத்தி பேரழலிடைப் புகுவழி இடையிட்ட மாலைக் காலத்துக் கூறும் கூற்றும் என்றவாறு.

உதாரணம்:

'பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
யணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடகிடை மிடைந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டீம

நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ றற்றே' (புறம்-உசசு)

எனவரும்.

ஆய் பெருஞ் சிறப்பிற் புதல்வன் பயந்த தாய் தபவரூஉம் தலைப்பெய் நிலையும் என்றது — மகனைப் பெற்ற தாய் அவன் கடன் இறுத்து மடியும் தலைப்பெய் நிலையும் என்றவாறு.

ஏனையர் இசையினை யிறுத்துத் தன்னிசை ஒன்றுனே சிறந்த சேயைப் பயந்த தாய் என ஒட்டுக.

உதாரணம் :

'இடம்படு ஞாலத் தியல்போ கொடிதே
தடம்பெருங்கட் பாலக னென்னுங் — கடன்கழித்து
முள்ளெயிற்றுப் பேதையாள் புக்காண் முரணவியா
வள்ளெயிற்றுக் கூற்றத்தின் வாய்'
(வெண்பா. சிறப்பிற் பொதுவி - ரு)

எனவரும்.

மலர்தலை உலகத்து மரபு நன்கு அறியப் பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்து என்றது — இடமகன்ற உலகத்தின் மரபு நன்கு விளங்கப் பலரும் மாயத் தான் மாயாத புறங்காடு வாழ்த்தலும் என்றவாறு.

உதாரணம் :

'களரி பரந்து கள்ளி போங்கிப்
பகலுங் கூஉங் கூகையொடு பிறழ்வர
வீம விளக்கிற் பேஎய் மகளிரோ
டஞ்சுவந் தன்றி மஞ்சுபடு முதுகாடு

நெஞ்சமர் காதல ரழுத கண்ணீ
ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
வெல்லார்ப் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே' (புறம்-௩௫௬)

எனவரும்.

இவ் வாழ்த்தொடு தொகைஇ நிறையருஞ் சிறப்பின் துறை இரண்டு உடைத்து இத்திணை என முடிக்க. (௧௯)

௭௮. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே.

இது பாடாண்டிணை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — பாடாண் திணைப்பகுதி கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாம்; அஃது ஆராயுங் காலத்து எட்டு வகையினை உடைத்து என்றவாறு.

அவையாவன: கடவுள் வாழ்த்து வகை, வாழ்த்தியல் வகை, மங்கல வகை, செவியறிவுறுத்தல், ஆற்றுப்படை வகை, பரிசிற்றுறை வகை, கைக்கிளை வகை, வசை வகை என்பன. அவையாமாறு முன்னர் காட்டுதும்.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், கைக்கிளையாவது ஒருநிலத்திற்கும் உரித்தின்றி ஒருதலைக்காமமாகி வருமன்றே; அதுபோல இதுவும் ஒருபாற்கு உரித்தின்றி ஒருவனை யொருவன் யாதானும் ஒரு பயன் கருதிய வழி மொழிந்து நிற்பது ஆகலானும், கைக்கிளையாகிய காமப் பகுதிக்கண் மெய்ப்பெயர்பற்றிக் கூறுதலானும், கைக்கிளைபோலச் செந்திறத்தாற் கூறுதலானும் என்க. நொந்திற மாவது கழிபேர் இரக்கம்; செந்திற மாவது அஃது அல்லாதன. (௨0)

எகூ. அமரர்கண் முடியு மறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினு
மொன்றன் பகுதி யொன்று மென்ப.

இது பாடாண் பாட்டிற்கு உரியதோர் பொருண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — அமரர்கண் முடியும் அறுவகை யானும் என்றது — கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவ ராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்பனவற்றினும் என்றவாறு.

புரைதீர் காமம் புல்லிய வகையினும் என்றது—குற்றந் தீர்ந்த காமத்தைப் பொருந்திய வகையினும் என்றவாறு.

அஃதாவது ஐந்திணை தழுவிய அகம்.

ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப என்றது — அவையிற் றின் ஒரு கூற்றின் பாகுபாடு பாடாண்டிணை ஆதற்குப் பொருந்தும் என்பர் புலவர் என்றவாறு.

என்றது, கொடிநிலை முதலிய ஆறும் கடவுட் புகழ்ச்சி யன்றிப் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வருதல், காமப் பகுதியிற் பாடும் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வரு தல் என்ற இவ்விருவகையானும் ஒருவனைப் புகழ்தலாற் பாடாண் பாட்டு ஆயிற்று என்க.

இன்னும், 'புரைதீர் காமம் புல்லிய வகையினும் ஒன் றன் பகுதி' என்ற அதனன், ஐவகைப் பொருளினும் ஊடற் பொருண்மை பாடாண் பகுதிக்கு ஒன்றும் என்ற வாறும். இன்னும் இதனனே இயற்பெயர் சார்த்திவாராது நாடும், ஊரும் இதுவென விளங்க வரும் ஊரன், சேர்ப் பன் என்னும் பெயரினன் ஒரு கூறு குறிப்புப் பற்றி வரும் பகுதியும் பாடாண் பாட்டாம் என்று கொள்க. ()

௩0. வழக்கியன் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினு
முன்னோர் கூறிய குறிப்பினுஞ் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.

இது சில பொருட்கண் வரும் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேற்சொல்லப்பட்டன வழக்கியலும் பக்கத்து வகைபெற நிறுத்திப் பரவலும் புகழ்ச்சியும் கருதிய பக்கத்தினும், முதலாசிரியர் கூறிய காமக் குறிப்பினும், செந்துறைப் பாட்டின்கண் வரும் வண்ணப் பகுதி வரைதல் இல்லை அவ்விடத்து என்றவாறு.

குறிப்பு என்பது காமம். அஃதாமாறு வருகின்ற சூத்திரத்துள்

'காமப் பகுதி கடவுளும் வரையார்' (தொல். புறத். ௨௩)

என ஒட்டி எழுந்தமையான் உணர்க.

இதனாற் சொல்லியது தேவபாணியும், அகப்பொருள் பாடும் பாட்டும், இசைத் தமிழில் வரைந்து ஓதினாற் போலச் செந்துறைப் பாட்டிற்கு உரிய செய்யுள் இவை என்று உரைத்தல் இல்லை பாடாண் பாட்டின்கண் வருங் காலத்து என்றவாறும். எனவே எல்லாச் செய்யுளும் ஆம் என்றவாறு.

இனி, புகழ்தல் படர்க்கைக்கண்ணும், பரவல் முன்னிலைக்கண்ணும் வருமாறு :

'கண்ணகன் ஞால மளந்ததூஉங் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉம் — நண்ணிய
மாயச் சகட முதைத்ததூஉ மிம்மூன்றும்
பூவைப்பூ வண்ண னடி' (திரிகடு - கடவுள் வாழ்த்து)

இது புகழ்தல்.

'வைய மகளை யடிப்படுத்தாய் வையகத்தா
ருய்ய வுருவம் வெளிப்படுத்தாய் — வெய்ய
வடுந்திற லாழி யரவணையா யென்று
நெடுந்தகை நின்னையே யாம்' (வெண்பா. பாடாண் - ந)

என்பது பரவல்.

'வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் செல்வி
னெறிகொள் படிவத்தோய் நீயும் — பொறிகட்
கிருளீயு ஞாலத் திடரெல்லா நீங்க
வருளீயு மாழி யவன்' (வெண்பா. பாடாண் - சஉ)

இது புலவராற்றுப்படை.

'மாயவன் மாய மதுவான் மணிநிரையு
ளாயனு வெண்ண லவனருளான் — காயக்
கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்
சுழலழலுள் வைகின்று சோ' (வெண்பா. பாடாண் - ச0)

இது கந்தழி.

'வேண்டுதியா னீயும் விழைவோ விழுமிதே
யீண்டியம் விம்ம வினவளையார் — பூண்டயங்கச்
சூலமோ டாடுஞ் சுடர்ச்சடையோன் காதலற்கு
வேலனோ டாடும் வெறி' (வெண்பா. பாடாண் - சக)

இது வள்ளி.

வள்ளி என்பது ஈண்டு வெறியாட்டு.

கொடி நிலை வந்தவழிக் காண்க.

இனி, அவை சார்ந்து வருமாறு முன்னர்க் காட்டுதும்.

இனிக் காமப் பகுதி வருமாறு :

'மலைபடு சாந்த மலர்மார்ப யாநின்
பலர்படி செல்வம் படியேம் — புலர்விடியல்
வண்டினங்கூட் டுண்ணும் வயல்சூழ் திருநகரிற்
கண்டனங் காண்டற் கினிது' (வெண்பா. பாடாண்- சஎ)

இஃது ஊடற் பொருண்மைக்கண் வந்தது. இனி, இயற்பெயர் சார்த்தியும் வரும்.

'வையைதன்,
னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்'
(கலி. மருதம் - உ)

என்பது குறிப்பினாற் பாட்டுடைத் தலைமகனைக் கிளவித் தலைமகனாகக் கூறியது.

'பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்கண்
ணேந்துகோட் டெழில்யானை யொன்னுதார்க் கவன்வேலிற்
சேந்துநீ யினையையா யொத்ததோ சின்மொழி'
(கலி. குறிஞ்சி - உ௬)

இது காமத்தின்கண் வந்தது. (உஉ)

## அக. காமப் பகுதி கடவுளும் வரையா ரேனோர் பாங்கினு மென்மனார் புலவர்.

இது கடவுண்மாட்டு வருவதோர் பாடாண் பக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — காமப் பகுதி கடவுண் மாட்டும் வரையார், ஏனோர் மாட்டும் வரையார் என்ப புலவர் என்றவாறு.

என்றது கடவுள்மாட்டுத் தெய்வப் பெண்டிர் நயந்த பக்கமும் பாடப் பெறும் என்றவாறு. ஏனோர்-மானிடர்.

உதாரணம் :

'நல்கெனி னாமிசையா னேனென்னுஞ் சேவடிமே
லொல்கெனி னுச்சியா னேனென்னு — மல்கிரு
ளாட லமர்ந்தாற் கரிதா லுமையாளை
யூட லுணர்வதோ ராறு' (வெண்பா. பாடாண் - சஅ)

எனவரும். இது தெய்வப் பெண்டிர் நயந்த பக்கம்.

'அரிகொண்ட கண்சிவப்ப வல்லினென் னாகம்
புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி — வரிவண்டு
பண்ணலங்கூட் டுண்ணும் பனிமலர்ப் பாசூரென்
னுண்ணலங் கூட்டுண்டா னூர்'
(வெண்பா. பாடாண் - சக)

இது மானிடப் பெண்டிர் நயந்த பக்கம். (உரு)

## அஉ. குழவி மருங்கினுங் கிழவ தாகும்

இது குழவிப் பருவத்தும் காமப் பகுதி பாடப்பெறும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — குழவிப் பருவத்தும் காமப் பகுதி கூறப்பெறும், அவர் விளையாட்டு மகளிரொடு பொருந்தியக்கண் என்றவாறு.

உதாரணம்:

'வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்தா
வரிக்கண்ணி யஞ்சி யலற — வெரிக்கதிர்வேற்
செங்கோல னுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினு
மெங்கோலந் தீண்ட லினி' (வெண்பா. பாடாண் - ருO)

எனவரும். (உச)

## அரு. ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப வழக்கொடு சிவணிய வகைமை யான.

இதுவும் அது.

இதன் பொருள் — ஊரின்கண் தோற்றமாகக் காமப் பகுதி நிகழ்தலும் உரித்து என்று சொல்லுவர் புலவர், அது நிகழுங் காலத்து வழக்கொடு பொருந்தி நடக்கும் வகைமையின்கண் என்றவாறு.

'ஊரொடு தோற்றம்' என்பது பேதை முதலாகப் பேரிளம்பெண் ஈறாக வருவது. 'வழக்கு' என்பது சொல்லுதற்கு ஏற்ற நிலைமை. 'வகை' என்பது அவரவர் பருவத்திற்கு ஏற்பக் கூறும் வகைச் செய்யுள்.

உதாரணம் வந்த வழிக் கண்டுகொள்க.

'ஒடு' எண்ணுக்கி, ஊரும் பிறப்பும் என்றலும் ஒன்று.

அ௪. மெய்ப்பெயர் மருங்கின் வைத்தன வழியே.

இதுவும் பாடாண் பாட்டிற்கே உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — மேற் சொல்லப்பட்டனவும் இனிக் கூறுவனவும் ஒருவற்குக் காரணமாகி மெய்ப் பெயராகி வரும் பொதுப்பெயரான் அன்றி இயற்பெயரின் பக்கத்தும் வரும் நெறிப்பட்ட பாடாண் டிணைக்கண் என்றவாறு. (உசு)

அ௫. கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே.

இது சார்ந்து வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — கொடிநிலை முதலாகச் சொல்லப் பட்ட முற்பட்ட மூன்றும் பாட்டுடைத் தலைமகனைச் சார்த்தி வருங்காலத்துக் கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வரும் என்றவாறு.

வடு நீங்கு சிறப்பின் முதலன — கொடிநிலை, கந்தழி, வள்ளி என்க.

உதாரணம் :

'பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்
பாம்புண் பறவைக் கொடிபோல — வோங்குக
பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்
கொல்யானை மன்னன் கொடி'
(வெண்பா. பாடாண் - ௩௧)

எனவரும். இது கொடிநிலை.

'அன்றெறிந் தானு மிவனு லரண்வலித்
தின்றிவன் மாறு வெதிர்வார்யா — ரென்று
மடையார் மணிப்பூ ணடையாதார் மார்பிற்
சுடராழி நின்றெரியச் சோ' (வெண்பா. உழி - எ)

இது கந்தழி.

வள்ளியிற் சார்ந்து வருமாறு வந்தவழிக் கண்டு கொள்க.

'வந்தது கொண்டு வாராதது முடித்தல்'
(தொல். மரபி - ௧௧0)

என்பதனுல் புலவர் ஆற்றுப்படை முதலாகிய மூன்றுஞ் சார்த்தி வரும் எனவும் கொள்க. முருகாற்றுப்படையுள்,

'மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி' (திருமுருகு. எ௧ - எ௩)

என்றவழி, ஒருமுகத்தாற் பாண்டியனையும் இதனுட் சார்த்தியவாறு கண்டுகொள்க.

இனிப் பரவற்குச் சார்ந்து வருமாறு :

'கெடலரு மாமுனிவர்'

என்ற கலிப்பாட்டினுள்,

'அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்

26

புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
றொன்று முதிர்கட லுலக
மொன்றுப் திகிரி யுருட்டுவோ னெனவே'

(யாப். விரு. அ௩. மேற்கோள்)

என்ற சரிதகத்துள் விளாக்காத்தனர் பாட்டுடைத் தலைமகனைச் சார்த்தியவாறு கண்டு கொள்க.

பிறவும் அன்ன. (உஎ)

## அசுஉ. கொற்ற வள்ளை யோரிடத் தான.

இதுவும் பாடாண்டிணைக்கு உரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் — கொற்றவள்ளையும் ஓர் இடத்துப் பாடாண் பாட்டாம் என்றவாறு.

என்றது, துறை கூறுதல் கருத்தாயின் வஞ்சியாம். புகழ்தல் கருத்தாயின் பாடாண்டிணையாம் என்றவாறும்.

உதாரணம்:

'வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்தலுற் றோர்க்கு மாயோ னன்ன
வுரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற
நின்னொன்று கூறுவ துடையே னென்னெனிற்
பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்
டிறங்குகதிர்க் கழனிநின் னிளையருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியு நக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் னொளிறிலங்கு நெடுவே
லொன்னார்ச் செகுப்பினுஞ் செகுப்ப வென்னதூஉங்
கடிமரந் தடித லோம்புநின்
னெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே' (புறம் - ருஎ)

எனவரும். (உஅ)

அஎ. கொடுப்போ ரேத்திக் கோடாஅர்ப் பழித்தலு
மடுத்தூர்ந் தேத்திய வியன்மொழி வாழ்த்துஞ்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானுங்
கண்படை கண்ணிய கண்படை நிலையுங்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலை நோக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்துஞ் செவியறி வுறூஉவு
மாவயின் வரூஉம் புறநிலை வாழ்த்துங்
கைக்கிளை வகையோ டுளப்படத் தொகைஇத்
தொக்க நான்கு முளவென மொழிப.

இது பாடாண்டிணைக்குத் துறையாமாறு உணர்த்து தல் நுதலிற்று.

இதன் பொருள் — 'கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்' முதலாக 'வேலை நோக்கிய விளக்கு நிலை' ஈறுகச் சொல்லப்பட்டனவும், 'வாயுறை வாழ்த்து' முதலாகக் 'கைக்கிளை' உளப்பட நால்வகையும் பாடாண்டிணைக் குத் துறையாம் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும் என்றது — கொடுப்போர் ஏத்தல் எனவும் கொடார்ப் பழித்தல் எனவும் கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் எனவும் மூவகைப்படும்.

என்றது, பெற்றோர் ஈவோரைப் புகழ்தலும், ஈயா ரைப் பழித்தலும், ஈவோரைப் புகழ்ந்து ஈயாரைப் பழித் தலும் செய்ப என்றவாறும்.

கொடுப்போர் ஏத்தற்கு உதாரணம்:

'தடவுநிலைப் பலவி னுஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்

வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
வடகின் றண்ணுறை யாக யாஞ்சில
வரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
யிருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
கருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்ரு வீகையு முளதுகொல்
போற்ரு ரம்ம பெரியோர்தங் கடனே' (புறம் - க௪௦)

எனவரும்.

'பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே' (புறம் - க0எ)

என்ற கபிலர் பாட்டும் அது.

கொடார்ப்பழித்தற்கு உதாரணம்:

'ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ
தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை
யனைத்தா கியரினி யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணுது கண்டன மதனு
னேயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதன்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கநின் னுளே' (புறம் - கககூ)

எனவரும்.

கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தற்கு,

உதாரணம் :

'களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
வீகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
யுரைசா லோங்குபுக ழொரீஇய
முரசுகெழு செல்வர் நகர்போ லாதே' (புறம் - கஉஎ)

எனவரும்.

இதனுள் ஏத்தப்பட்டவன் ஆய்; பழிக்கப்பட்டார் செல்வர் என்க.

அடுத்து ஊர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்தும் என்றது — வென்றியுங் குணனும் அடுத்துப் பரந்தேத்திய இயன்மொழி வாழ்த்தும் என்றவாறு.

அஃது, இயன்மொழி எனவும் வாழ்த்து எனவும் இயன்மொழி வாழ்த்து எனவும் மூவகைப்படும்.

உதாரணம் :

'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலி
னீர்த்துறை படியும் பெருங்களிறு போல
வினியை பெரும வெமக்கே மற்றதன்
றுன்னருங் கடாஅம் போல
வின்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே' (புறம் - கச)

எனவரும். இஃது இயன்மொழி.

'ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்

வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
வறம்பா டின்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
யமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோ
னெங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயி
னிமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே'. (புறம் - ௩௪)

இது வாழ்த்து.

'ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென்
றறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்று
மெங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடியோ
னன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே'. (புறம் - ௯)

இஃது இயன்மொழி வாழ்த்து.

'பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமோ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகல
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினுங்
கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே
சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
யொருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
யாடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையே மென்றனர் நீயு
நுந்நுகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
காறிரை யெடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனி
னடையடுப் பறியா வருவி யாம்ப
லாயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே' (பதிற்றுப் - சுங)

என்ற பதிற்றுப்பத்தும் அது. பிறவும் அன்ன.

சேய் வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க்கு உரைத்த கடைநிலை யாயினும் என்றது — சேய்மைக்கண் ணின்று வருகின்ற வருத்தம் தீர வாயில் காவலர்க்கு உரைத்த வாயினிலையும் என்றவாறு.

உதாரணம் :

'வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்
தாம், முன்னியது முடிக்கும் முரணுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி

தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொ
லறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மரங்கொ றச்சன் கைவல் சிறுஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
யெத்திசைச் செல்லினு மத்திசைச் சோறே'

(புறம் - உ0சு)

எனவரும்.

கண்படை கண்ணிய கண்படை நிலையும் என்றது — இறைவன் கண்படை நிலையைக் குறித்த கண்படை நிலையும் என்றவாறு.

என்றது அரசன் இனிது துயின்றது கூறல் என்றவாறும்.

உதாரணம் :

'மேலா நிறையமருண் மின்னார் சினஞ்சொரியும்
வேலான் விறன்முனை வென்றடக்கிக் — கோலாற்
கொடிய வுலகிற் குறுகாமை யெங்கோன்
கடியத் துயிலேற்ற கண்' (வெண்பா - பாடாண். அ)

எனவரும்.

கபிலை கண்ணிய வேள்வி நிலையும் என்றது — கபிலை குறித்த வேள்வி நிலையும் என்றவாறு.

உதாரணம் :

'பருக்காழும் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
குருக்கட் கபிலை கொடுத்தான் — செருக்கோ
டிடிமுரசத் தானை யிகலிரிய வெங்கோன்
கடிமுரசங் காலைச் செய' (வெண்பா - பாடாண். கச)

எனவரும்.

வேலை நோக்கிய விளக்கு நிலையும் என்றது — வேலின் வெற்றியினைக் குறித்த விளக்கு நிலையும் என்றவாறு.

நோக்குதல் ஆவது — விளக்கு ஏதுவாக வேலின் வெற்றியைக் காட்டுதல். விளக்கு - நிச்சம் இடும் விளக்கு.

உதாரணம் :

'வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி
யொளிசிறந் தோங்கி வரலா — லளிசிறந்து
நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு'

(வெண்பா. பாடாண் - கஉ)

எனவரும்.

வாயுறை வாழ்த்தும் என்றது — வெஞ்சொல்லைப் பிரித்தலின்றிப் பிற்பயக்கும் என்று வேம்புங் கடுவும் போல ஓம்படைக் கிளவியாலே மெய்யுறக் கூறுதலும் என்றவாறு.

என்னை :

'வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே'

(தொல். செய்யு - ககஅ)

என்றாகலின்.

உதாரணம் :

'காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகு
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போல
தானு முண்ண னுலகமுங் கெடுமே' (புறம் - கஅச)

எனவரும்.

செவியறிவுறாவும் என்றது — உயர்ந்தோர்மாட்டு அவிந்து ஒழுகுதல் வேண்டும் எனச் செவியறிவுறுத்துக் கூறுதலும் என்றவாறு.

என்னை :

'செவியுறை தானே,
பொங்குத லின்றிப் புரையோர் நாப்ப
ணவிலுதல் கடனெனச் செவியுறுத் தற்றே'
(தொல். செய்யு - ௧௧௦)

என்றாராகலின்.

உதாரணம் :

'அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே — முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை'
(வெண்பா. பாடாண் - ௩௩)

எனவரும்.

ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும் என்றது :— மன்னன் இடத்ததாகி வரும் புறநிலைவாழ்த்தும் என்றவாறு. என்றது :

'வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ'
(தொல். செய்யு - ௧௧௬)

என்பதனால் இனிது வாழ்மின் என்னும் பொருண்மேல் வரும்.

உதாரணம் :

'தென்ற லிடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்காப்ப வென்றுந்
தீரா நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே'
(யா. விரு - ௫௫. மேற்கோள்)

எனவரும்

கைக்கிளை வகை என்றது — ஆண்பாற் கூற்றுக் கைக்கிளையும், பெண்பாற் கூற்றுக் கைக்கிளையும் என்றவாறு.

இவையும் பாடாண் பாட்டாம்.

உதாரணம் :

'துடியடித் தோற்செவித் தூங்குகை நால்வாய்ப்
பிடியேயா னின்னை யிரப்பல் — கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமெஞ்
சாலேகஞ் சார நட' (முத்தொள் - சஙு)

எனவும்,

'அணியாய செம்பழுக்காய் வெள்ளிலையொ டேந்திப்
பணியாநீ யெம்பெருமா னென்று — கணியார்வாய்க்
கோணலங் கேட்பதூஉங் கொண்கர் பெருமானார்
தோணலஞ் சேர்தற் பொருட்டு'

எனவும் வரும். பிறவும் அன்ன.

'இவ் வகையொடு உளப்படத் தொகை இத்தொக்க நான்கும் முன்னையவும் இத்திணைக்கு உள என மொழிப எனக் கூட்டி முடிக்க. (உகூ)

அஅ. தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூத ரேத்திய துயிலெடை நிலையுங்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமுஞ்
சிறந்த நாளினிற் செற்ற நீக்கிப்
பிறந்த நாள்வயிற் பெருமங் கலமுஞ்
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்
நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு
மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமு,

மன்னெயி லழித்த மண்ணு மங்கலமும்
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவள னேத்தி
நடைவயிற் றோன்றிய விருவகை விடையு
மச்சமு முவகையு மெச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமுங்
காலங் கண்ணிய வோம்படை யுளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற்
கால மூன்றொடு கண்ணிய வருமே.

இதுவும் அது.

இதன் பொருள் — 'துயிலெடை நிலை' முதலாகப் பரிசில் 'விடை' ஈறுகச் சொல்லப்பட்டனவும், நாளும் புள்ளும் பிறவற்றினிமித்தமும் ஓம்படையும் உளப்பட உலக வழக்கின் அறியும் நடக்கையது குறிப்பில் மூன்று காலமும் பற்றிவரும் பாடாண்டிணை என்றவாறு.

தாவில் நல் இசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயில் எடை நிலையும் என்றது — கிடந்தோர்க்குக் கேடு இல்லாத நற்புகழைப் பொருந்தவேண்டிச் சூதர் ஏத்திய துயில் எடைநிலையும் என்றவாறு.

உதாரணம் :

'அளந்த திறையா ரகலிடத்து மன்னர்
வளந்தரும் வேலோய் வணங்கக் — களந்தயங்கப்
பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
தூமலர்க்க ணேர்க துயில்' (வெண்பா. பாடாண் - க)

என வரும்.

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப் பெற்ற பெருவளம்

பெறுஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும் என்றது — கூத்தராயினும் பாணராயினும் பொருநராயினும் விறலியாயினும் நெறியிடைக் காட்சிக் கண்ணே எதிர்ந்தோர் உறழ்ச்சியாற் றும் பெற்ற பெரு வளன் நமக்குப் பெறலாகும் எனவுஞ் சொன்ன பக்கமும் என்றவாறு.

பெருவளன் பெறுஅர்க்குப் பெற்ற அன்னோர் எதிரச் சென்று பயன் அறிவுறுத்திய பக்கம் எனக்கூட்டுக. 'பக்கமும்' என்றதனுன், இறைவன் நாடுசேர் ஆற்றினது அருமையும் அவனது பண்புங் கூறப்படும் என்றவாறும். அவற்றுள் கூத்தராற்றுப் படைக்கு

உதாரணம் :

'திருமழை தலைஇய' (மலைபடுகடாம் - க)

என்னும் பாட்டுக் காண்க

பாணாற்றுப் படைக்கு உதாரணம் :

'பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரெ ணொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா ஆங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
யின்னே மாயினே மன்னே யென்று
முடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக
னெத்துணை யாயினு மீத்த னன்றென
மறுமைநோக் கின்றோ வன்றே
பிறர், வறுமைநோக் கின்றவன் கைவண் மையே' (புறம் - கசுக)

எனவரும்.

பொருநராற்றுப் படைக்கு உதாரணம் :

'சிலையுலா நிமிர்ந்த சாந்துபடு மார்பி
னொலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினு
முள்ள லோம்புமி னுயர்மொழிப் புலவீர்
யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
வகமலி யுவகையோ டணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்
துன்னரும் பரிசி றருமென
வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே'
(புறம் - ௩௯௪)

எனவரும்.

விறலியாற்றுப் படைக்கு உதாரணம் ;

'மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி
மாரி யன்ன வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே' (புறம் - ௧௩௩)

எனவரும்.

சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப் பிறந்த நாள்வயிற் பெருமங்கலமும் என்றது — சிறந்த நாட்களின் உண்டாகிய செற்றத்தை நீக்கிப் பிறந்த நாட்கண் உளதாகிய பெருமங்கலமும் என்றவாறு.

உதாரணம் :

அந்தண ராவொடு பொன்பெற்றார் நாவலர்
மந்தரம்போன் மாண்ட களிறூர்ந்தா ரெந்தை
யிலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா ளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு' (முத்தொள் - ௬௰)

எனவரும்.

சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும் என்றது — ஆண்டுதோறும் முடிபுனையும்வழி உளதாகும் மிகப் புனித நீராட்டு மங்கலமும் என்றவாறு.

சீர்த்தி சிறந்த மங்கலம் என ஒட்டுக. உதாரணம் வந்தவழிக் காண்க.

நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும் என்றது— ஒழுக்கத்தை மிகுத்து ஏத்தப்பட்ட குடைநிழன் மரபு கூறுதலும் என்றவாறு.

'மரபு' என்றதனன் செங்கோல் இயல் கூறலும் கொள்ளப்படும்.

உதாரணம் :

திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்' (சிலப். மங்கல - க)

எனவரும். பிறவும் அன்ன.

மாணார்ச் சுட்டிய வாள் மங்கலமும் என்றது — பகைவரைக் கருதிய வாள்மங்கலமும் என்றவாறு.

உதாரணம் :

'பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
யிரும்புக நீரு மாடிக் கலத்திடைக்
குரம்பைக் கூரைக் கிடங்கினும் கிடக்கு
மங்கல மகளிரொடு மாலை சூட்டி
யின்குர லிருப்பை யாழெடுத் தியம்பத்

தெண்ணீர்ப் படிவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் செல்லினுஞ் செல்லுங்
கண்ணுறின், னிருங்கடற் றானை வேந்தர்
பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னதே'
(புறம் - ௩௨௨)

எனவரும்.

மன் எயில் அழித்த மண்ணு மங்கலமும் என்றது— நிலைபெற்ற எயிலை அழித்து மண்ணு மங்கல நீராடுதலும் என்றவாறு.

இஃது உழிஞைப் படலத்துக் கூறப்பட்டதாயினும், மண்ணு நீராடுதலின் இதற்குந் துறையாயிற்று. இவ்வாறு செய்தனை எனப் புகழ்ச்சிக்கண் வருவது பாடாண்டிணையாம். இவ்வுரை மறத்துறை ஏழற்கும் ஒக்கும். உதாரணம் வந்தவழிக் காண்க.

பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும் என்றது — பரிசில் கடாவுதலாகிய கடைக்கூட்டு நிலையும் என்றவாறு.

'நிலை' என்றதனான் இன்னும் பரிசில் பெறப் போகல் வேண்டும் என்னுங் குறிப்பும் கொள்க.

உதாரணம்:

'ஆடெரி மறந்த கோடிய ரடுப்பி
னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரிய
ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே' (புறம் - ௧௬௪)

எனவரும். இது பரிசில் கடாநிலை.

'நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
விசும்போ டெருவை பசுந்தடி தடுப்பப்
பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே.' (புறம் - ௬௪)

இது பரிசில்பெறப் போகல்வேண்டும் என்னுங் குறிப்பு.

பெற்ற பின்னரும் பெருவள் ஏத்தி நடைவயின் தோன்றிய இருவகை விடையும் என்றது—பரிசில் பெற்ற பின்னரும் அவன் கொடுத்த மிக்க வளனை ஏத்தி * வழக்கின்கண் தோன்றிய இருவகை விடையும் என்றவாறு.

அவையாவன: தான் போதல் வேண்டும் எனக் கூறுதலும், அரசன் விடுப்பப்போதலும்.

வளன் ஏத்தியதற்கு உதாரணம்:

'தென்பரதவர் மிடல் சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடியமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பி
னற்றேர்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பணிக்கயத் தன்ன நீணகர் நின்றே
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
வெமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரு
மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்
கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை

* 'வாழ்த்தின்கண்' எனவும் பாடம்.

வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதாணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே
யிருங்கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே' (புறம் - ருளஅ)

எனவரும்.

தான் பிரிதல் வேண்டிக் கூறியதற்கு உதாரணம்:

'ஊனு மூனு முனையி னினிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
மளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறியுன மாகத் தான்பெரி
தன் புடைமையி னெம்பிரி வஞ்சித்
துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
பயம்பக ரறியா மயங்கரின் முதுபாழ்ப்
பெயல்பெய் தன்ன செல்வத் தாங்க
ணீயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
யூனுகிர் வலந்த தெண்க ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலைப் பாணியி
னிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமா லுயக்கமுந் தீர்க்குவோ மதனா
லிருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு
மிதற்கொண் டறிநை வாழியோ கிணைவ
சிறுநனி, யொருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மானப் பிறப்பிறன்
றிருங்கோ லீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே' (புறம் - கூஅக)

எனவரும்.

அரசன் விடை கொடுப்பப் போந்தவன் கூற்றுக்கு உதாரணம் :

'நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்குங்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
னெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கு
மின்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயு
மெல்லோர்க்குங் கொடுமதி மனைக்கிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
றிருந்துவேற் குமண னல்கிய வளனே' (புறம் - கசுஙு)

எனவரும்.

'இருவகை விடையும்' என்றதனால், பரிசில்பெற்ற வழிக் கூறலும், பெயர்ந்தவழிக் கூறலும் ஆம்.

அச்சமும் உவகையும் எச்சம் இன்றி நாளும் புள்ளும் பிறவற்றினிமித்தமும் காலம் கண்ணிய ஓம்படை என்றது — அச்சமும் உவகையும் ஒழிவு இன்றி நாளானும் புள்ளானும் பிறிது நிமித்தத்தானும் காலத்தைக் குறித்த ஓம்படையும் என்றவாறு.

அச்சமாவது தீமை வரும் என்று அஞ்சுதல். உவகையாவது நன்மை வரும் என்று மகிழ்தல். நாளாவது நன்னாள் தீநாள் நோக்கல். புள்ளாவன ஆந்தை முதலாயின. பிற நிமித்தமாவன அலகு முதலாயின. காலங் கண்ணுதலாவது வருங் காலங் குறித்தல். உதாரணம் :

'ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவின்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனியுய ரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னதனெதி ரேர்தரத்
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னா
தளக்கர்த் திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி

யொருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந
னோயில னாயி னன்றுமற் றில்லென
வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
வஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவுந்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவுங்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவுங்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவு
மேலோ ருலக மெய்தின னாகலி
னொண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்ற னசைவர்க்
களந்துகொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே' (புறம் - உ௨௯)

எனவரும். இது பிறவாறு நிமித்தங் கண்டு அஞ்சியது.

'புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
யனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே' (புறம் - ௨0)

என்றது புட்பற்றியது.

'காலனுங் காலம் பார்க்கும்' (புறம் - ௪௧)

என்னும் புறப்பாட்டு நிமித்தம்பற்றி வந்தது.

'நல்லவை செய்த லாற்றீ ராயினு
மல்லல் செய்த லோம்புமின்' (புறம் - ௧௯௫)

என்றது ஓம்படைபற்றி வந்தது.

உளப்பட ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின் காலம் மூன்றொடு கண்ணிய வருமே என்றது—இவை உளப்பட உலகத்து உளதாகும் இருவகை வழக்கின்றியும் நடக்கையது குறிப்பினான் காலம் மூன்றனொடும் ஏற்குமாறு கருதும்வழி வரும் பாடாண்டிணை என்றவாறு.

இரண்டாவது புறத்திணையியல் உரை முற்றிற்று.

# மேற்கோள் செய்யுள் முதற் குறிப்பு

## அகத்திணையியல், புறத்திணையியல்

## மேற்கோள் நூல் முதற் குறிப்பு

### அசத்திணையியல், புறத்திணையியல்

அகம், அகநா - அகநானூறு.
ஆசிரியமாலை.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந்தி, ஐம் - ஐந்திணை ஐம்பது.
கலி, கலித் - கலித்தொகை.
களவழி - களவழி நாற்பது.
குறுந் - குறுந்தொகை நானூறு.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிற்றட - டக்ற்றகம்.
தண்டி - தண்டியலங்காரம்.
திணைமாலை - திணைமாலை நூற்றைம்பது.
திருக்குற - திருக்குறள்.
திருமுருகு - திருமுருகாற்றுப் படை.
தொல் - தொல்காப்பியம்.
நற்றி - நற்றிணை நானூறு.
நாலடி - நாலடியார்.
பதிற்று, பதிற்றுப் - பதிற்றுப் பத்து.
பழமொழி - பழமொழி நானூறு.
பன்னிரு, பன்னிருபட - பன்னிரு படலம்.
பிங்க - பிங்கலந்தை.
புறம் - புறநானூறு.
பெரும்பாண - பெரும்பாணாற்றுப்படை.
மதுரைக்கா - மதுரைக்காஞ்சி.
மலைபடுகடாம்.
முத்தொள் - முத்தொள்ளாயிரம்.
முல்லைப் - முல்லைப் பாட்டு.
யாப் - யாப்பருங்கல விருத்தி.
வெண்பா - புறப்பொருள் வெண்பா மாலை.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 29 | புறத் - நிகு | புறத் - க |
| 11 | 16 | காட்டும | காட்டும் |
| 18 | 3 | தான் | தாற் |
| 18 | 15 | னன்றுறை | னன்றறை |
| 26 | 2,20 | நில | நிலே |
| 33 | 4 | முலேலே | முலேயே |
| 34 | 22 | கழிபடர் | கழிபடர்க் |
| 35 | 8 | யென்று | யொன்று |
| 35 | 28 | லீக்குருச் | லீங்குச் |
| 38 | 10 | துசடீர்புகா | துகடீர்கா |
| 54 | 24 | னஞ்சொற் | னஞ்சேரற் |
| 55 | 19 | மாக்குவை | மர்தருவி |
| 56 | 15 | சிற்றட்டகம் | சிற்றடக்கம் |
| 59 | 18 | றடைச்செற்றி | சுனேச்சேற்றி |
| 79 | 13 | பாந்தர் | மானதர் |
| 82 | 28 | உதாரணம் : முன் | உதாரணம்முன் |
| 84 | 21 | சிற்றட்டகம் | சிற்றடக்கம் |
| 86 | 6 | தாதுணும் | தாதுணம் |
| 93 | 23 | செய்யுள | செய்யுள் |
| 94 | 5 | அவர்கள் | அவர் |
| 102 | 3 | உடைதது | உடைத்து |
| 109 | 27 | கால்கோ | கல்கொ |
| 109 | 27 | நடுகல் | நடுதல் |
| 120 | 6 | வரை | வுரை |
| 128 | 17 | தோற்றூர் | தோற்றேர் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 141 | 17 | கம்முடன் | தம்முடன் |
| 141 | 22 | தார்ச | தார்ச் |
| 145 | 3 | யடட | யட்ட |
| 158 | 1 | நிலைஇபகாய | நிலைஇயாகாய |
| 193 | 7,8 | தலைப்பெய்நிலை | தலைப்பெயல்நிலை |
| 210 | 1 | வுறாவும் | வுறாஉவும் |
| 213 | 14 | பாட்டுக் | பாட்டுட் |



Printed at the 'Caxton Press,' Madras, E. — 1920.

